Registered No. M. 1500. "NAVASAKTI"

# நவசக்தி

வா ப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

| சந்தா விவரம் | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 5 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 3 | 0 |
| வெளிநாடு–வருடசந்தா | 6 | 0 |

விளம் ர விகிதம்
பத்தி 1-க்கு வ ரம் 1-க்கு ரூபா 7 0
சில்லரை விள ம்பரம் 1 அங். 0
முன்பண ின்றி விளம்பர
செய்யப்படமா ட்டாது.

சிலம்பு கூ — சுக்கில ஸூ வைகாசி மீ உவ (15—5—29) புதன்கிழமை — பரல் நஉ



## புறநானூறு

யாதுமூரே யாவருங் கேளிர்
தீது நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்த
லினிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவி
னின்னா தென்றலு மிலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்
முறைவழிப் படூஉ மென்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை யிகழ்த லதனினு மிலமே.

எமக்கு எல்லாம் ஊர்; எல்லாரும் சுற்றத்தார்; கேடும் ஆக்கமும் தாமேவரினல்லது, பிறர்தர வாரா; நோதலும் அது தீர்தலும் அவற்றை யொப்பத் தாமே வருவன; சாதலும் புதி தன்று, கருவிற்றோன்றிய நாளே தொடங்கியுள்ளது; வாழ்தலை இனிதென்று உவந்ததுமிலம்; ஒரு வெறுப்புவந்த விடத்து இன்னா தென் றிருத்தலுமிலம்; மின்னுடனே மழை குளிர்ந்த துளியைப் பெய்தலான் அமையாது கல்லையலைத்து ஒலிக்கும் வளவிய பேர் யாற்று நீரின்வழியேபோம் மிதவை போல அரியவுயிர் ஊழின் வழியே படுமென்பது நன்மைக்கூறு பாடறிவோர் கூறிய நூலாலே தெளிந்தேமாகலான், நன்மையான் மிக்கவரை மதித்தலுமிலேம்; சிறியோரைப் பழித்தல் அம்மதித்தலினுமிலேம்.

"நவசக்தி" ஆசிரியர்

# திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

எழுதிய நூல்கள்

## தமிழ்த் தென்றல்

தமிழ்நாட்டுப் பண்டைப் பெருமை, தாய்மொழிப் பற்று, பிறப்புரிமை, உரிமை வேட்கை, தேசபக்தி, சுயராஜ்யப்பேறு, ஒற்றுமை, சகோதர நேயம், ஊக்கம், காந்தியடிகள் அறம், ஒத்துழையா இயக்கச் சிறப்பு, அவ்வியக்க முறைகளால் நாட்டுக்குள்ள நலன் முதலிய பொருள்கள் இந்நூற்கண் ஆங்காங்கே மிளிர்தல் காணலாம். அணிந்துரையுடன் 480-பக்கங்கொண்டது. நல்ல காகிதத்தில் அழகிய எழுத்தில் அச்சிடப் பட்டுளது. காலிகோ பயிண்டு விலை ரூ. 2.

***

## என் கடன் பணிசெய்து கிடப்பதே

இந்நூலில் பணியின் பெருமை விரிவாக ஓதப்பட்டிருக்கிறது. கடவுள்பணி, சராசரப்பணி, சிறப்பாகத் தேசப்பணி ஆகிய இப்பணிகளை இந்நூலில் காணலாம். இஃதொரு கருமயோக நூல்; காலத்துக் கேற்றது. இரண்டாம் பதிப்பு விலை அணா 8.

***

## தமிழ் நூல்களில் பௌத்தம்

வேண்டுவோர் 5 அணா தபால் முத்திரை அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

விலை அணா 4.

## முருகன் அல்லது அழகு

இரண்டாம் பதிப்பு

விரிவாக எழுதப்பட்டது

இந்நூற்கண் முருகன் சொற்பொருள் விளக்கம், அழகினியல், இளமைப்பேறு, இயற்கை மாண்பு, நோன்பு வழிபாடுகளின் திறம், முருகனடியார் இயல்பு முதலியன ஓதப்பட்டிருக்கின்றன. இந்நூலை முற்றும் பயில்வோர் உள்ளத்தில், இயற்கை வழிபாட்டில் ஆர்வம், ஒரே கடவுள் ஒரே நெறி என்னும் உறுதி, எவ்வுயிர்க்குந் தீங்கு நினையாப்பேரறம் முதலியன நிலவும். 224-பக்கங்கொண்டது. நல்ல காகிதத்தில் அச்சிடப்பட்டுளது. கலிகோ பயிண்டு விலை ரூபா 1.

***

## சைவத்தின் சமரசம்

இந்நூற்கண் சமயத்தின் இயல்பு இஃது என்பதும், எல்லாச்சமயங்களும் ஒரு கடவுளையே பல பெயரால் பல வழியில் போற்றுகின்றன என்பதும், சமயங்கள் பல வாய்க்கிடப்பினும்-அவைகள் யாவும் சமரசத்தையே குறிக்கொண்டு நிற்கின்றனஎன்பதும், அச்சமரசமே சைவமென்பதும், பிறப்பையொட்டி உயர்வு தாழ்வு பாராட்டாமை, கைம்மாறற்ற பணி, பிறர் குற்றம்பொறுத்தல், பாவ மன்னிப்பு முதலியன சைவசமயத்தில் சிறப்பாக விருக்கின்றன என்பதும், அருள்-கருணை - இரக்கம் - தயை உள்ள விடங்களிலெல்லாம் சைவம் மிளிரும் என்பதும், சைவம் ஒரு சமயம் அன்றென்பதும் பிறவுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. நல்ல காகிதத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது. இரண்டாம் பதிப்பு விலை அணா 8.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

சிலோன் ஏஜண்டு:—
S. சண்முகம் பிள்ளை,
நெ. 4, கைமான்ஸ் கேட், கொழும்பு.

வந்தேமாதரம்

# நவசக்தி

“ என்கடன் பணிசெய்து கிடப்பதே”

சிலம்பு ௧ | சுக்கிலஹு வைகாசிமீ உ௨ (15—5—29) புதன்கிழமை | பரல் ௩௦

## இராமலிங்க சுவாமிகள்

சமரச சன்மார்க்க சங்கம்

திரு. வி. க.

நிகழும் விபவ ஆண்டு, தைத்திங்கள் பூசநாள் விழாவையொட்டி வடலூரில் (26-1-29) கூடிய சமரச சன்மார்க்க மகாநாட்டில், திரு. வி. கலியாணசுந்தர முதலியார் தலைமை வகித்து நிகழ்த்திய முன்னுரை வருமாறு :—

VII

(உ) முறை.

சுவாமிகள் பாடிய பாக்களையும் எழுதிய உரைகளையும் நோக்குழிச் சுவாமிகள் கொண்ட முறைகள் இன்ன இன்ன என்று புலனுகின்றன. அம்முறைகளைப் பொது சிறப்பென இருகூறிட்டுப் பேசலாம். ஈண்டுப் பெரிதுஞ் சிறப்பு முறைக்கண்மீதே நாட்டஞ் செலுத்தக் கருதியிருக்கிறேன். அச்சிறப்பு முறைகளுள்ளுஞ் சுவாமிகள் இளமையில் கொண்ட வழிபாட்டு முறைகளைத் தனியாக இறுதியில் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். அவையல்லாத பிறவற்றையே ஈண்டுச் சுருங்கச் சொல்லப் புகுகிறேன்.

(i) கடவுளிடத்துறுதி

அருட்பாவென்னுங் கருவிகொண்டு சுவாமிகள் வாழ்வை நோக்கினல், அவர் வாழ்வில் முதல் முதல் புலனுவ தொன்று. அவ்வொன்றே அவர் வாழ்வைச் சிறப்புச் செய்தது. அவ்வொன்றே எல்லார்வாழ்வையும் மேன்மையுறச் செய்வது. அவ்வொன்றிலா வாழ்வு எத்தகையதாயினும், அது சவலையுற்றுச் சாம்பியழுகிச் சாகும். அவ்வொன்றெது? கடவுளிடத்துறுதி. அது வாழ்விற்குக் கொழுக்கொம்பு போன்றது. இராமலிங்க சுவாமிகள் அக்கொம்பரைத் தாம் வேறு அது வேறு என்று கருதாதவாறு உடும்பெனப் பற்றிக்கொண்டார். சுவாமிகளின் எண்ணஞ் சொல் செயல் எல்லாம் கடவுளிடத்தே படிந்து கிடந்தன; அவர் ஊன் உயிர் உடல் எல்லாம் அதனுடுருவி நின்றன.

* * *

சுவாமிகள் கடவுளிடங் கொண்ட உறுதியை அருட்பா முழுதுங் காணலாம். அருட்பாவை யோதியுணரும் ஒருவன் ஆண்டவனிடத் துறுதி கொள்ளுதல் ஒருதலை.

“அப்பா நின்னையன்றி யெங்கு மணைப்பாரில்லையே, யந்தோ நின்னையன்றி யெங்கு மருள்வா ரில்லையே, எப்பா லவர்க்கு நின்னையன்றி யிறைமை யில்லையே, யெனக்குநின் மேலன்றி யுலகி லிச்சை யில்லையே”

“உன்னை மறக்கி லெந்தாயுயி ரொன்னுடம்பில் வாழுமோ, வுன்பாலன்றிப் பிறர் பாலென்ற னுள்ளஞ் சூழுமோ, என்னைக் கொடுக்க வாங்கிக் கொண்டதென்ன கருதியோ, வெந்தாய் நின்னைக் கொடுக்க வென் பாலின்று வருதியோ”

“இறைவா நின்னைக் கனவிலேனும் யான் மறப்பனோ, வெந்தாயுலகத் தவர்கள்போல் நானினி யிறப்பனோ, மறைவாசகமும் பொருளும்பயனு மதிக்கு மதியிலே, வாய்க்கக் கருணைபுரிந்து வைத்தா யுயர்ந்தபதியிலே”

“இறுகப்பிடித்துக் கொண்டேன்பதத்தை யினிநான் விடுவனோ, வெந்தாய் பாதம் பிடித்த கையால்வேறு தொடுவனோ, குறுகப் பயந்து கூற்றுமோடிக் குலைந்துபோயிற்றே, கோவேயுன்ற னருட்சிற்சோதி யென்ன தாயிற்றே”

அன்பர்களே! இப்பாக்களின் உள்ளக்கிடக்கையை யோர்க; அடிகள் ஆண்டவனிடத்துக் கொண்ட உறுதியைத் தேர்க.

“தந்தையுந் தாயுங்குருவும் யான்போற்றுஞ் சாமியும் பூமியும் பொருளுஞ், சொந்த நல்வாழ்வு நேயமுந்துணையுஞ் சுற்றமுமுற்று நீயென்றே, சிந்தையுற்றிங்கே யிருக்கின்றேனிதுநின் திருவுளந் தெரிந்ததே யெந்தாய், நிந்தைசெய் யுலகில்யா னுளங்கலங்கல் நீதியோ நின்னருட்கழகோ”

“ஊன்பெரு முயிருமுணர்ச்சியு மன்பு மூக்கமு முண்மையு மென்னைத், தான் பெறு தாயுந்தந்தையுங் குருவுந் தனிப் பெருந் தெய்வமுந்தவமும், வான்பெறு பொருளும்வாழ்வு நற்றுணையு மக்களு மனைவியுமுறவும், நான்பெறு நண்பும்யாவு நீ யென்றே நம்பினேன் கைவிடேலெனையே”

“சோறு வேண்டினுந் துகிலணி முதலாஞ் சுகங்கள் வேண்டினுஞ் சுகமலாற் சுகமாம், வேறு வேண்டினு நினையடைந் தன்றி மேவொ ணுதெனு மேலவ ருரைக்கே, மாறு வேண்டிலேன் வந்துநிற் கின்றேன் வள்ளலே யுன்றன் மனக்குறிப் பறியேன், சாறு வேண்டிய பொழில்வட லரசே சத்தி யச்சபைத் தனிப்பெரும் பதியே”

எனவரூஉம் பாக்களால் தமக்குரிய எல்லாம் இறைவனே என்று சுவாமிகள் விளக்கியிருத்தல் காண்க.

* * *

சுவாமிகள் தெய்வம் தெய்வம் என்று ஒரு பெரும் பதிகம் பாடியுள்ளார். அதன் கண் அன்புக் கடவுளை எவ்வெவ் விதமாகத் தமிழில் சுவாமிகள் வடித்துக் காட்டுகிருர். இரண்டொரு பாக்கள் வருமாறு :—

“எல்லாஞ்செய் வல்லதெய்வ மெங்கு நிறை தெய்வம் என்னுயிரிற் கலந்தெனக்கே யின்பநல்குந் தெய்வம், நல்லார்க்கு நல்ல தெய்வம் நடுவான தெய்வம் நற்சபையி லாடுகின்ற நடராசத் தெய்வம், கல்லார்க்குங் கற்றவர்க்குங் களிப்பருளுந் தெய்வம் காரணமாந் தெய்வமருட் பூரணமாந் தெய்வம், செல்லாத நிலைகளெலாஞ் செல்லுகின்ற தெய்வம் சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.”

“தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வம் தன்னைநிக ரில்லாத தனித்தலைமைத் தெய்வம், வாயார வாழ்த்துகின்றோர் மனத்தமர்ந்த தெய்வம் மலரடியென் சென்னிமிசை வைத்தபெருந் தெய்வம், காயாது கனியாகிக் கலந்தினிக்குந் தெய்வம் கருணைநிதித் தெய்வமுற்றுங் காட்டுவிக்குந் தெய்வம், சேயாக வெனைவளர்க்குந் தெய்வமகா தெய்வம் சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.”

(ii) இயற்கை வாழ்வு

இவ்வுறுதி யுடையார் இயற்கைக்கு மாறுபட்டு வாழ்வு நடாத்த ஒருப்படார். இயற்கை நெறியே செந்நெறி யென்பது அவர்க்குச் செவ்வனே விளங்கும். நமது சுவாமிகள் இயற்கையோடியைந்து வாழ்வு நடாத்தி, அதன் உள்ளுறையாகிய இறைவனிடத் தன்பு செலுத்தி வந்தார்.

* * *

சுவாமிகள் இயற்கையோ டியைந்த வாழ்வு நடாத்தினுர் என்பதற்குச் சான்றுகள் பலவுள. இயற்கை வாழ்வின் இன்றியமையாமையைச் சுவாமிகள் எழுதிய உரைப்பகுதிகளிற்காண்க.

* * *

சுவாமிகள் நீராடல், காற்றில் மூழ்கல், இளங்கதிரொளியில் படிதல் முதலியவற்றை ஆற்றிக் கொண்டிருந்தார். அடிகள் நீராடிய ஓடை உங்களிற்பெரும்பான்மையோர்க்குத் தெரியும். நாளை அடியார்கள் அருட்பா ஓதிக்கொண்டு இங்கிருந்து சுவாமிகள் அடைந்த ஞான சித்தபுரம் போகும் வழியில் அவ்வோடையில் மூழ்குவார்கள். கண்ணையுங் கருத்தையுங் கவரும் அவ்வழகிய ஓடையில் மூழ்குவதை ஒரு வழக்கமாகவும் அன்பர்கள் கொண்டிருக்கிறுர்கள்.

* * *

இராமலிங்க சுவாமிகள் அடிக்கடி வெளியில் உலவுவார்களென்று கேள்வியுற்றிருக்கிறேன். அவ்வுலவலில் காற்றில் மூழ்கலும் ஞாயிறொளியில் படிதலும் நிகழ்கின்றன. சுவாமிகள் கோடையில் குளிர் நிழலில் அமர்ந்து அந்நிழலை ஆண்டவன் வடிவெனக்கொண்டு மகிழ்ந்து மகிழ்ந்து உருகுவாராம். சுருங்கக்கூறின் சுவாமிகள் ஆண்டவன் வடிவான இயற்கையோடியைந்து வாழ்வு நடாத்தினுர் என்று கூறலாம்.

இராமலிங்க அடிகள், இயற்கையோடியைந்தவாழ்வு நடாத்தி; அதன் வாயிலாக இறைவன் துணை புரியும் அருட்டிறத்தை யுணர்ந்து, அவ்வுணர்வைப் பாட்டாகப் பாடிப் பாடி இன்புற்றுர். இயற்கையில் இறைவன் பாட்டாகக் காட்சி யளிப்பதைக்கண்ட அடிகள், அவ்வியற்கைப் பாட்டைத் தெள்ளிய தீந்தமிழ்ப் பாட்டுப் படமாக வரைந்து நமக்கு உதவியுள்ளார்.

“கோடையிலே யிளைப்பாற்றிக் கொள்ளும்வகை கிடைத்த குளிர்தருவே தருநிழலே நிழல்கனிந்த கனியே, ஓடையிலே யூறுகின்ற தீஞ்சுவைத்தண் ணீரே உகந்ததண்ணீரிடைமலர்ந்த சுகந்தமண மலரே, மேடையிலே வீசுகின்ற மெல்லியபூங் காற்றே மென்காற்றில் விளைசுகமே சுகத்திலுறும் பயனே, ஆடையிலே யெனைமணந்தமணவாளாபொதுவில் ஆடுகின்ற வரசேயென் னலங்கலணிந் தருளே.”

இப்பாட்டில் இயற்கைக் கூறுகளை ஆண்டவனுகக் கண்டு கண்டு சுவாமிகளுற்ற மகிழ்ச்சியில் தமிழ் அன்பர்களே கருத்திருத்துங்கள்; பாட்டுடன் அப்பாட்டில் திளையுங்கள்; பாட்டு வடிவான இயற்கை இறை நிழலில் இருங்கள்; தண்ணீரி லாடுங்கள்; மலர் மணத்தை முகருங்கள்; காற்றில் மூழ்குங்கள்; ஆண்டவன் அருளின்பத்தை நுகருங்கள்; நுகர்ந்து மகிழ்வுறுங்கள். அம் மகிழ்ச்சியே உடலையும் உயிரையும் ஓம்பும் அமிழ்தம் அமிழ்தமென்க. அவ்வமிழ்தப் பெருக்கே சுவாமிகள் அருளிய அருட்பா. அத்தமிழ் விருந்துண்ண எழுங்கள்; எழுங்கள்.

“உண்ணவுண்ணத் தெவிட்டாதே தித்தித்தென் னுடம்போ டுயிருணர்வுங் கலந்து கலந் துள்ளகத்தும் புறத்துந், தண்ணியவண்ணம்பரவப் பொங்கிநிறைந் தாங்கே ததும்பியென்றன் மயமெல்லாந் தன்மயமே யாக்கி, எண்ணியவென் னெண்ணமெலா மெய்தவொளி வழங்கி இலங்குகின்ற பேருணாவி னமுதத் திரளே, புண்ணியமே யென்பெரிய பொருளேயென் னரசே புன்மொழியென் றிகழாதே புனைந்துமகிழ்ந் தருளே”

“காட்சியுறக் கண்களுக்குக் களிக்கும் வண்ண முளதாய்க் கையுமெய்யும் பரிசிக்கச் சுகபரிசத் ததுவாய்ச், சூழ்ச்சியுற நாசிக்குச் சுகந்தஞ்செய் குவதாய்த் தூயசெவிக் கினியதொரு சுகநாதத் ததுவாய், மாட்சியுற வாய்க்கினிய பெருஞ்சுவை யீகுவதாய் மறைமுடிமேல் பழுத்தெனக்கு வாய்த்தபெரும் பழமே, ஆட்சியுற வருளொளியாற் றிருச்சிற்றம் பலத்தே ஆடல்புரி யரசேயென் னலங்கலணிந் தருளே”

இயற்கை வாழ்விற்குரிய துறைகள் பலவுண்டு. அவைகளை ஈண்டு விரிக்கிற் பெருகும். சிலவற்றை மட்டும் ஈண்டுக் குறித்து மேற் செல்கிறேன்.

* * *

இயற்கை வாழ்விற்கு இன்றியமையாதன வற்றுள் உணவுமொன்று. ‘உணவுக்

கேற்ற குணம்' என்பது பழமொழி. பொருந்தா வுணவால் மனிதன் குண நல னிழந்து இயற்கைச் செந்நெறி விடுத்து பிறழ்ந்து வீழ்வதுமுண்டு. ஆகவே உணவை ஒழுங்கு படுத்திக் கொள்ளவேண்டுவது மக்கள் கடமை.

* * *

இராமலிங்க சுவாமிகள் பொருந்திய உணவெனுஞ் சைவ உணவு அருந்தி அருந்திச் சிவனொடு தொடர்பு கொள்ளும் ஒரு நெறி நின்றார். சுவாமிகள் கீரையுணவே பெரிதும் உண்டு வந்ததாகச் சிலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். புலால் உணவைச் சுவாமிகள் கடிந்து மறுத்து உரைத்ததைப் போல வேறு எவருங் கூறவில்லை என்றுஞ் சொல்லலாம்.

* * *

அவ்வுணவால் மக்கள் உடல் நலனிழந்து, உயிர் நலனிழந்து கேடுறுவதைச் சுவாமிகள் நன்குணர்ந்து, அதை மறுக்கலானார். அம்மறுப்பு மொழிகள் பல படக் கிடக்கின்றன. அவைகளுள் சில வருமாறு:—

"ஊழ்வகைக்குத் தக்கபடி மிருகம் பறவை முதலிய சீவர்களுக்கு அருளால் நியதியாகார மாத்திரமிருக்க மனிதர்களுக்கு மாத்திரம் ஊழ்நியதி யாகாரத்தோடு ஆகாமிய முயற்சி யாகாரமும் வேண்டுவது அவசியமென்றது எப்படியெனில்:—மனிதர்கள் பிராரத்தப்படி நியதி யாகாரத்தைப் புசித்துப் பிராரத்த அநுபவத்தை நீக்கிக் கொள்வதற்கும், ஆகாமியத்தால் முயற்சி யாகாரத்தைப் புசித்துக் காணேந்திரிய தேகத்தை வலுவுள்ளதாகச் செய்துகொண்டு சன்மார்க்க சாதனத்தை அநுசரித்துச் சித்தி முத்தி இன்பங்களைப் பிராரத்த ஆகாரமும் ஆகாமியமுயற்சி ஆகாரமும் அவசியம் வேண்டுமென்றறிய வேண்டும். மிருகம், பட்சி, ஊர்வன, தாபரமென்கிற சீவதேகங்கள் தண்டனை நிமித்தம் வகித்த தேகங்களாதலால் பிராரத்த ஆகாரம் கடவுள் விதித்த வண்ணம் அருட்சத்தியால் தடைபடாமல் கொடுக்கப்படுமாகலால் ஆகாமிய ஆகாரம் சம்பாதிக்க வேண்டாமென்றறிய வேண்டும்.

ஆனால் சீவகாருண்ணியம் எல்லாச் சீவர்களுக்கும் பொதுவென்று முதலில் குறிக்கப்பட்ட தென்னையெனில்; சீவகாருணிய வொழுக்கத்தில் முக்கியமாக எல்லா மனிதர்களுக்கும் பொதுவில் பசியினால் வருந் துன்பத்தை நிவர்த்தி செய்து ஆகாரத்தினால் திருப்தியின்பத்தை உண்டுபண்ண வேண்டுமென்றும், பசியைப்போல் வேறுவகையினால் சீவகொலை நேரிடுவதானால் அந்தச் சீவகொலையைத் தம்மாற் கூடியவரையில் எவ்விதத்திலாயினும் தடை செய்து உயிர் பெறுவித்துச் சந்தோஷிப்பிக்க வேண்டுமென்றும், பிணி பயமுதலிய மற்றவேதுக்களால் சீவர்களுக்குத் துன்பம் நேரிடில் அத்துன்பங்கள் தங்களால் நீக்கத்தக்கவைகளாகில் நீக்க வேண்டுமென்றும், மிருகம் பறவை ஊர்வன தாவரம் முதலிய சீவர்களிடத்துப் பயத்தினால் வருந் துன்பத்தையும் கொலையினால் வரும் துன்பத்தையும் எவ்விதத்தும் நிவர்த்தி செய்ய வேண்டுமென்றும், அவற்றுள் துட்ட சீவர்களிடத்தும் சிறிது பயத்தினால் வருந் துன்பமாத்திரமே யல்லது கொலையினால் வரும் துன்பங்களைச் செய்யப் படாதென்றும், இவ்வகைமுழுதும் சீவகாருணியமேயாதலால் எல்லா வுயிர்களிடத்தும் சீவகாருண்யம் வேண்டுமென்று கடவுளால் ஆணை செய்ததென்றறியவேண்டும்.

மனிதர்கள் தங்கள் வாழ்க்கைக்குச் சகாயமாகச் சம்பாதிக்கின்ற உயிர்களில் சில உயிர்கள் தாமச ஆகாரமாகிய மாமிச ஆகாரம் செய்வதனால் அவைகளுக்குப் பசியாற்றுவிக்கும் போது அந்த ஆகாரத்தைக்கொடுத்து ஆற்றுவிக்கப்படாதோ வென்னில் ஒரு சீவனைக்கொன்று ஒரு சீவனுக்கு மாமிசத்தால் பசியாற்றுதல் சீவகாருணிய வொழுக்கமே யல்லவென்றும் கடவுள் சம்மதமும் அல்லவென்றும் இவைகளுக்கு முழுவிரோதமென்றும் அறிய வேண்டும். எல்லாச் சீவர்களுக்கும் இயற்கையுண்மை ஏகதேசங்களாகிக் கடவுளியற்கை விளக்கம் ஒன்றோடொன்று மாறுபடாதாகலாலும், கடவுளியற்கை விளக்கமுஞ் சீவவியற்கை விளக்கமும் அந்தந்தத் தேகங்களினும் விளங்குகின்ற படியாலும் ஒருசீவனை வதைத்து அதனால் மற்றொரு சீவனுக்குப் பசியாற்றுதல் சீவகாருணிய வொழுக்கத்திற்கு முழுவிரோதமென்றே அறியவேண்டும். புலி சிங்கம் முதலிய மிருகங்கள் மற்றொரு சீவனைக்கொன்று தின்று தாமசவாகாரத்தால் பசியாற்றித் திருப்தியின்பத்தை யடைந்து சந்தோஷிக்கின்றன. அந்தச் சந்தோஷம் கடவுளியற்கைவிளக்க ஏகதேசமும் சீவ வியற்கை விளக்கமிறைவு மெனவுங் கொள்ளக்கூடாதோவென்னில், கூடாது. தாமசவாகாரத்தால் பூரண சத்துவமாகிய கடவுளியற்கை விளக்க ஏகதேசமும் ஏகதேச சத்துவ மாகிய ஆன்ம வியற்கை விளக்கமும் விளங்கா. இருளால் ஒளி விளங்காததுபோல். இதைத் தாமசவாகார மென்பது என்னவெனில்—கடவுள் விளக்கம் வெளிப்படாதபடி ஆன்மவிளக்கத்தைமறைத்த இம்சை ஆகாரமாகலால் தாமசவாகாரமாயிற்று. இந்த ஆகாரத்தால் திருப்தியின்பமாகிய சந்தோஷ விளக்கம் எதனுடைய விளக்கமென்னில், அஞ்ஞ பசுகரண மாயாவிளக்கமென்று அறியவேண்டும்.

பசுவென்பது என்னை? ஆணவம், மாயை, கன்மம் என்கிற மும்மல பந்தத்தால் ஒன்றுபட்டு அறிவிழந்த ஆன்மாவையே பசுவென்பது. அப்பசுவிற்கு விளக்கம் தோன்றுவது எப்படியென்னில்—சூரியனை மறைத்த மேக வண்ணத்திலுள்ள இருளினிடத்தும் சூரியப்பிரகாச விசேஷத் தோன்றுதலால் அவ்விருளும் விளக்கமாக வழங்குகின்றது. அதுபோல், அசுத்த மாயாகரணங்களுந் தாமச குணமும் இருள் வண்ணமுடைய வாயினும் தம்மால் மறைக்கப்பட்ட பரசிவவிளக்க விசேஷத்தால் அசுத்தமாயாகரணமும் தாமச குணமும் விளக்கமாக வழங்குகின்றன. இதனால் தாமசவாகாரத்தில் வரும் விளக்கம் அசுத்த மாயாகரண விளக்கமே யென்று அறியவேண்டும். ஆனால் மரம் புல் நெல் முதலான தாபரங்களும் உயிராகவே சொல்லப் படுகின்றனவே அவைகளை இம்சைசெய்து ஆகாரமாகக் கொண்டால் அவை தாமசவாகார மல்லவோ அதனால் வந்த சந்தோஷம் அசுத்த மனோகரண சந்தோஷமல்லவோ என்னில்—மரம் புல் நெல் முதலான தாபரங்களும் உயிர்கள்தான். அவைகளை இம்சை செய்து ஆகாரங்கொண்டால் அது ஏகதேச தாமச வாகாரந்தான்; அந்த ஆகாரத்தால் வந்த சந்தோஷம் அசுத்தகரண சந்தோஷந்தான். ஆனால் அப்படியல்ல. மரம் புல் நெல் முதலான சீவர்கள் பரிசமென்கிற ஓரறிவையுடைய சீவர்களாதலாலும், அவ்வுடம்பில் சீவவிளக்கம் ஒருசார் விளங்குதலாலும், அவ்வுயிர்கள் தோன்றும் வித்துக்களும் மற்ற வித்துக்கள்போல் சடமாதலாலும், அவ்வித்துக்களை நாமே விதைத்து உயிர்விளைவு செய்யக்கூடுமாதலாலும், அவ்வுயிர்களை வேறு செய்யாமல் அவ்வுயிர்களினிடத்து உயிரில்லாமல் உயிர் தோன்றுதற்கிடமான சடங்களாகத் தோன்றிய வித்துக்களையும் காய்களையும் கனிகளையும் பூக்களையும் கிழங்குகளையும் தழைகளையும் ஆகாரங்களாகக் கொள்வதே யன்றி, அவ்வுயிருள்ள முதல்களை ஆகாரமாகக் கொள்ளாத படியாலும், அவைகளில் வித்து, காய், கனி முதலானவை கொள்ளும்போது சுக்கிலம் நகம் ரோமம் முதலியவைகளை வாங்கும்போது இம்சை யுண்டாகாமைபோல் இம்சை யுண்டாகாதபடியாலும், தாபர வர்க்கங்களுக்கு மனமுதலான அந்தக்கரணங்கள் விருத்தியில்லாத படியாலும் அது உயிர்க் கொலையுமல்ல; துன்பம் உண்டு பண்ணுவதுமல்ல; அதனால் அது சீவ காருணிய விரோதமாகாது; அந்த ஆகாரத்தால் வந்த சந்தோஷம் சீவவிளக்க சகிதமான கடவுள் விளக்கமே யாகுமென்றறிய வேண்டும்.

மாமுதலிய தாபரங்களில் தோன்றிய வித்துக்களை இனி உயிரேறுதற்கிடமாகிய சடங்களென்பது எப்படியென்னில்—வித்துக்களில் சீவனிருந்தால் நிலத்தில் விதையாமுன்னமே விளைய வேண்டும்; நிலத்தில் விதைத்த காலத்தும் சில வித்துக்கள் விளையாமலே யிருக்கின்றன; அன்றியும் வித்தென்பது காரணம்; இந்தக் காரணம் உடம்பு தோன்றுதற்கே யென்று சிறு பிள்ளைகளாலும் அறியப்படும். அன்றி உயிர் நித்தியம், உடம்பு அநித்தியம், நித்தியமானவுயிர் காரணம் வேண்டாது; அநித்தியமாகிய வுடம்பே காரணம்வேண்டும். ஆகலின் வித்துக்களைச் சடமென்றறியவேண்டும், ஆனால் வித்துக்களினிடத்து ஆன்மாக்கள் ஏறுவது எப்படி யென்னில்—நிலத்திற்கலந்த வித்திற்கு நீர்விடில் அந்த நீரின் வழியாகக் கடவுள் அருள் நியதியின்படி ஆன்மாக்கள் அணுத் தேகத்தோடு கூடி நிலத்திற் சென்று அந்நிலத்தின் பக்குவசத்தியோடு கலந்து வித்துக்களினிடமாகச் செல்கின்றன வென்று அறிய வேண்டும். முளைகளையே பிடுங்கப்படாதென்று சிலர் சொல்லுகின்றார்கள். வித்து, காய், இலை முதலியவைகளைப் புசிக்கலாமென்று சொல்வதெப்படியென்னில்—வித்து நிலத்திற் படிந்தபின் நீர்வழியாக ஆன்மாவானது சென்று பக்குவசத்தியிற் கலந்து வித்திலேறி முளைத்தபடியால் முளையானது வித்து காய் முதலியவைகளைப் போலச் சடமல்ல. ஆதலால் முளைகளைப் பிடுங்கக் கூடாதென்பது உண்மையென்று அறிய வேண்டும்.

வித்து, காய், கனி முதலியவற்றில் உயிர்க்கொலை இல்லாவிடினும் நகம், ரோமம், சுக்கிலம் முதலியவற்றிலிருக்கிற அசுத்தமாவதில்லையோ வென்னில்—தத்துவ விருத்தியும் தாது விருத்தியும் இல்லாதபடியால் அசுத்தமுமில்லை. ஆதலில் மரம், புல், நெல் முதலியவைகளின் வித்து காய் கனி தழை முதலியவற்றைப் புசிப்பது சீவகாருணிய விரோதமல்லவென்று அறிய வேண்டும். மாமிச ஆகாரம் புலி முதலாகிய துட்ட மிருகங்களுக்கு நியதியாகாரமல்லவோ வென்றறிய வேண்டில், அது அவ்வுயிர்களுக்குச் சிருட்டி நியதி ஆகாரமல்ல. பரம்பர வழக்கத்தாற் பெற்ற ஆகாரமா மென்றறிய வேண்டும். ஆகலில் அதை நிவர்த்தி செய்வித்துச் சத்துவவாகாரங்களைப் புசிப்பிக்கும்படி செய்யவுங்கூடும்; ஒரு சீலமுடையவன் கிரகத்தில் வழங்குகின்ற பூனைக்கும் நாய்க்கும் வேறிடங்களிற் போய் அசுத்த ஆகாரங் கொள்ளாமல் காவல்செய்து அடிநாள் தொடங்கிச் சுத்தவாகார வழக்கமே செய்விக்கின்றான். அவைகள் அவைகளைப் புசித்து உயிர்வழங்கி வருகின்றன. அப்படியே புலி சிங்க முதலிய துட்டவர்க்கங்களையும் மேல்நின்று சுத்த ஆகாரத்தில் பழக்குவ ரீலாமையால் அசுத்தாகாரங்களைப் பழக்கத்தாற் புசிக்கின்றன வென்றறியலாம். ஆகலில் ஒரு சீவனைக்கொன்று மற்றொரு சீவனுக்குப் பசியாற்றுவித்தல் கடவுளருளுக்குச் சம்மதமு மல்ல; சீவகாருணிய வொழுக்கமு மல்லவென்று சத்தியமாக அறியவேண்டும்.

"மருவாணைப் பெண்ணுக்கி யொருகணத்திற் கண்விழித்து வயங்குமப்பெண், ஊருவாணை புருவாக்கி யிறந்தவரை யெழுப்புகின்ற வுறவனேனுங், கருவாணை யுறவிரங்கா அயிருடம்பைக் கடிந்துண்ணுங் கருத்தனேலெங், குருவாணை யெமதுசிவக் கொழுந்தாணை ஞானியெனக் கூறொணுதே."

"கொலைபுரிவார் தவிரமற்றை யெல்லாரு நினது குலத்தாரே நீயெனது குலத்து முதன் மகனே, மலைவறவே சுத்தசிவ சமரசன் மார்க்கம் வளர்வளாக் திருக்கவென வாழ்த்தியவென் குருவே, நிலைவிழைவார் தமைக்காக்கு நித்தியனே யெல்லா நிலையும் விளங்குறவருளில் நிறுத்தியசிற் குணனே, புலையறியாப் பெருந்தவர்கள் போற்றமணிப் பொதுவில் புனிதநடத் தரசேயென் புகலு மணிக் தருளே"

"உயிர்க்கொலையும் புலைப்புசிப்பு முடையவர்க ளெல்லாம் உறவினத்தா ரல்லரவர் புறவினத்தா ரவர்க்குப், பயிர்ப்புறுமோர் பூசிதவிர்த்தன் மாத்திரமே புரிக பரிந்தமற்றைப் பண்புரையேல் நண்புறவே லிங்கே, நயப்புறுசன் மார்க்கமவ ரடையளவு மிதுதான் நம்மாணை யென்றெனக்கு நவின்றவருளிறையே, மயர்ப்பறுமெய்த் தவர்போற்றப் பொதுவில்நடம் புரியும் மாநடத்தென் னரசேயென் மாலையணிந் தருளே."

## சைவ நூல்கள்

### சேக்கிழார் பிள்ளைத்தமிழ்

(அரும்பொருள்விளக்கவுரையுடன்.) இது மகா வித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் எழுதியது. திரு. ச. சதாசிவ செட்டியாரவர்கள் எழுதிய தெளிபொருள் விளக்க வுரையுடையது. இது சொல்லழகும், பொருளழகும் மிக்குடையதாய்க் கற்பார் நெஞ்சத்தைக் கவர்ந்து, இன்பவெள்ளத் தாழ்த்துந் தகையது. இக்கண் சித்தாந்தக் கருத்துக் கனம் நிறைந்து கிடக்கின்றன. 150-பக்கம். விலை அணு 10.

### திருக்கைலாய ஞானவுலா

(அரும்பொருள் விளக்கத்துடன்.) திரு. ச. சதாசிவ செட்டியாரவர்கள் எழுதிய தெளிபொருள் விளக்க வுரையுடையது.

இது சேரமான் பெருமாள் நாயனர் அருளிய பிரபந்தங்களில் ஒன்று. இதுதான் முதன் முதல் எழுதப்பட்ட உலாவாகும். இத்துடன் நூலின் உட்கருத்தமைந்த முன்னுரையும், ஆசிரியரின் வரலாறும் சேர்க்கப் பெற்றிருக்கின்றன. விலை அணு 5.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

# நாய்களின் உண்மைக் காதல்

## சபர்மதி ஆசிரமத்தில் ஒரு சம்பவம்

ஸ்ரீமான் ராஜாராம் எம். தொண்டோபின் வருமாறு எழுதுகிறார்:—

கதர் உற்பத்திக் கைத்தொழிலை (பஞ்சு வெட்டல், நூல் நூற்றல், பாவு செய்தல், அச்சுக்கட்டல், துணி நெய்தல்) கற்றுக் கொண்டுவர காங்கிரஸ் 18 மாகாணங்களிலிருந்தும் ஒவ்வொரு மாகாணத்திற்கு மும்மூன்று தொண்டர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு 1922 ல் சபர்மதி ஆசிரமத்திற்கு அனுப்பப்பட்டார்கள். தமிழ் நாட்டினின்று அனுப்பப்பட்ட மூவரில் நானும் ஒருவன். அப்பொழுது மகாத்மாஜி எர்வாடா ஜெயிலிலிருந்தார். அவருடைய ஸ்தானத்தில், சமீபத்தில் காலஞ்சென்ற ஸ்ரீயுத மகன்லால் காந்தி இருந்தார். அவரும் மகாத்மா காந்தியைப் போலவே குணக்குன்று. மகாத்மாவைப் பார்த்தால் மகன்லாலைப் பார்க்க வேண்டியதில்லை. உருவத்திலும் குணத்திலும் ஒத்திருப்பார்கள்.

### இரண்டு நாய்கள்

ஆசிரமத்தில் ஆறு மாத காலம் தங்கியிருக்கும் பாக்கியம்பெற்ற நான் அங்குக் கண்ணுற்ற அற்புதங்களில் ஒன்றை இங்குக் குறிப்பிட விரும்புகிறேன்.

'குத்தா' என்பதற்கு ஹிந்தியில் நாய் என்று அர்த்தம். சபர்மதி ஆசிரமத்தில் இரண்டு சவலை நாய்கள் இருந்தன. இவைகளை வேறு பெயரிட்டு அழையாமல் "குத்தா" என்றே அழைப்பது வழக்கம். இவ்விரண்டில் ஒன்று ஆண்; மற்றொன்று பெண். இவை இரண்டும் கருத்தொருமித்த காதல் வாழ்க்கையை நடத்தி வந்தன. ஒன்றை யொன்று விட்டுப் பிரிவதிலது. ஆசிரமத்தில் 'காலி' என்னும் மற்றொரு ஆண் நாய் உண்டு. இதை 'குத்தா' என்னும் பெண் நாய் எட்டிப் பார்ப்பதுமில்லை. இது தன் ஆண் நாயுடன் சண்டை போடுவதுமில்லை. இவ்விரண்டும் ஜோடியாக ஆசிரமத்துத் தாழ்வாரத்தைச் சுற்றி வரும். திறந்து வைக்கப்பட்டிருக்கும் அறைகளை எட்டிப் பார்க்கும். யாராவது தின்பண்டம் கொடுப்பார்களா என்னும் கருத்துக்கொண்டு வருவது வழக்கம்.

இத்தம்பதிகளைக்கண்டு நாங்கள் மகிழ்ச்சியடைவதுண்டு. இவை இரண்டும் உடம்பைச் சுத்தமாய் வைத்துக் கொள்வதினால் மற்ற நாய்களைப்போல் பலர் பார்த்து சீச்சீ என்று வெறுக்கத்தக்க விதமாக நடந்து கொள்வதுமில்லை. நானிருந்த ஆறுமாத காலம்வரை அவை கூடுவதை நான் கண்டதில்லை. அவை ஆசிரமத்தைச் சுற்றிலும் கூட மலஜலங் கழிப்பதில்லை. சாப்பிட்ட மிச்சத் துண்டுகளை இந்நாய் தம்பதிகளுக்கே எல்லோரும் கொடுக்கப் பிரியப்படுவதுண்டு. சில சமயம் இவை ஒன்றைவிட்டொன்று பிரிந்திருப்பின், ஒன்று மற்றொன்றுக் கென்று ரொட்டித் துண்டுகளை வாயில் கௌவிக்கொண்டு புதர்களிலும் ஆசிரமத்து மூலை முடுக்குகளிலும் மறைத்து வைத்துக் கொண்டிருந்து அது வரவும் அதற்குக் கொடுக்கும்.

### ஆண் நாயின் கவலை

நாங்கள் சபர்மதி நதியில் நீராடுங் காலத்தில் அவைகளும் அங்குமிங்கும் ஓடி ஆடும். இப்படி கொஞ்ச நாட் சென்றபின், பெண் 'குத்தா' குட்டி போடும் காலம் வந்தது. ஆண் நாய், ஆசிரமத்து வாசலுக் கெதிரே ஒரு பள்ளம் தோண்ட ஆரம்பித்தது. ஒரு வாரத்தில் இப்படி ஆழம் தோண்டிவிட்டது. பள்ளத்தின் உள் பக்கவில் சுரண்டிச் சுரண்டி ஒரு மணை போட்டது மாதிரி செய்து விட்டது. இஃது எதற்காக இப்படிச் செய்கிறதென யார்க்கும் தெரியவில்லை.

பள்ளம் சரியானபடி தோண்டியானதும் ஆண் நாய் தன் பத்தினியாகிய கர்ப்பிணியை மெல்ல நடத்திக் கொண்டு வந்து அப்பள்ளத்தில் இறக்கியது. ஆண் நாய் ரொட்டி தின்றதும் பெண் நாய்க்காக ரொட்டியை வாயில் கௌவிக்கொண்டு போய் கொடுக்கும். ஆண் நாய் இரவும் பகலும் பள்ளத்திற்குக் காவல் காத்து வந்தது. யாராவது பள்ளத்தை எட்டிப் பார்த்தாலும் நாய் உட்கார்ந்திருப்பது தெரியாது.

இப்படி இருக்கும் போது ஒருநாள் பெண் நாய் மூன்று குட்டிகளை ஈன்றது. அவை மிகவும் அழகுள்ளவைகளாயும், ஒரேநிற ஒரே தோற்றமு முடையவையாயு மிருந்தன. இவைகளைப் பார்க்க நாங்கள் அடிக்கடி போவதுண்டு. ஆசிரமவாசியார், அந்நியர் யார் என்பது நாய்களுக்கு நன்றாய்த் தெரியும். நாங்கள் போனவுடன் ஆண் நாய் வாலை யாட்டிக் கொண்டு தன்னிருப்பிடத்தை விட்டு விலகி எங்களுக்குப் பின்னால் ஒதுங்கி நிற்கும். அப்படி ஆண் ஒதுங்கினால்தான் பெண் நாய்தன்குட்டிகளை எடுக்க விடுகிறது. நாம் குட்டிகளைப் பார்க்கும் போது அதுவும் ஆவலுடன் வாலை ஆட்டிக் கொண்டு அண்ணாந்து பார்க்கிறது. தாய்மார் தங்கள் குழந்தைகளை பந்தக்கள் கையில் கொடுத்துவிட்டு எப்படி ஆவலாக நிற்பார்களோ அதே மாதிரிதான் இதுவும் நிற்கிறது.

### அந்தோ! இறந்தன

நவம்பர் மாதம் பிறந்தது. சபர் மதியில் தாங்க முடியாத கொடிய குளிர் ஆரம்பித்தது. ஆசிரம வாசிகளே கஷ்டப்படும்படியான நிலை ஏற்பட்டது. பாவம் நாய்கள் என் செய்யும்? நாய்க் குட்டிகள் ஒவ்வொன்றாக இறந்தன. டிசம்பர் மாதம் ஆரம்பத்தில் பெண் நாய் இறந்தது. இரண்டொரு தினத்திற்குள் ஆணு மிறந்தது. ஆசிரம வாசிகள்பெரிதும் துக்கப்பட்டார்கள்.



## காந்தி யடிகள் சுற்றுப்பிரயாணம்

7-5-29ல் காந்தி அடிகள் ராஜமகேந்திர புரத்திற்குச் சென்றார். அங்கு அவருக்குப் பலமான வரவேற்பும் உபசாரப் பத்திரங்களும் கிடைத்தன. இங்குக் கூடிய கூட்டத்தில், மாதர் கூட்டங்களில் கிடைத்த ரூ. 447-9-9 உள்பட மொத்தம் ரூ. 5897-13-7 வசூலாயிற்று. 8-5-29ல் சீதா நகரத்திற்கும், அதைச் சுற்றிலுமுள்ள கிராமங்களுக்கும், கௌதம சத்தியாக்கிரக ஆசிரமத்திற்கும் விஜயஞ் செய்தார். இவ்விடங்களில் அடிகளுக்கு உபசாரப் பத்திரங்களும் அநேக பணமுடிப்புக்களும் கிடைத்தன. 9-5-29ல் போலவரத்திற்குச் சென்ற பின்னர் 10-5-29ல் நெல்லூரையடைந்தார். அடிகள் புச்சி ரெட்டிபாளையம் என்னுமிடத்தில் ரூ. 7000 கொண்ட பணமுடிப்பொன்றைப் பெற்றார்.

பின்னர் காந்தி அடிகள் எல்லய்யபாளையம், ராஜபாளையம் இவ்விடங்களில் முறையே, ரூ 1116, (116 லாலாஜி நிதிக்கு,) 756 கொண்ட பண முடிப்புக்களைப் பெற்றார். பின்னர் பாரலர் பள்ளி, வீடவலூர், உட்டுக்கூர், நொப்பாரு, அல்லூர், காவலி இவ்விடங்களில் முறையே ரூ 296-6-0, 400, 1600, 116, 1200, 1650 வசூலாயிற்று.

11-5-29 ல் அடிகள் உலவபாத், கந்துகூர் என்னு மிடங்களுக்குப் போந்தார். இவ்விடங்களில் முறையே ரூ 600, 1100 கொண்ட பணமுடிப்புகள் கிடைத்தன. மோதிரங்களும் கதர் அணியும் ரூ 115-க்கு ஏலம் போடப்பட்டது. ஸ்ரீமதி கஸ்தூரி பாய், பாமூர் முதலிய விடங்களுக்குச் சென்றதில், ரூ 700 வசூலாயிற்று.

12-5-29 காலை மகாத்மா சங்கம் என்னு மிடத்துக்குச் சென்று அங்கு ரூ 16பணமுடிப்பைப் பெற்றுக் கொண்டு மீண்டும் நெல்லூர் வந்து சேர்ந்தார். நெல்லூரில் கஸ்தூரி தேவிடென் பாடசாலைக்கு அஸ்திவாரக்கல் நாட்டினார். அங்கு ரூ 290 அடங்கிய பணமுடிப் பொன்று கொடுக்கப்பட்டது. பிறகு வி.ஆர். கல்லூரிமைதானத்தில் கூடிய கூட்டத்தில் மகாத்மா காந்திக்கு, நெல்லூர் நகரசபை, ஜில்லா போர்டு, தாலுகா போர்டு, தோட்டிகள் சங்கம் இவைகளின் சார்பாக உபசாரப் பத்திரங்கள் வாசித்துக் கொடுக்கப்பட்டன. அங்கு ரூ. 6000 கொண்ட பணப்பை ஒன்று அடிகளுக்கு அளிக்கப்பட்டது.

13-5-29 மாலை 6 மணிக்குமேல் மகாத்மா காந்தியடிகள் கூடுருக்குச் சென்ற பின்னர், ரிபாலிலா என்னுமிடத்தை யடைந்தார். அங்கு ஸ்ரீமான் பட்டாபிராம ரெட்டியார் ரூ. 1400-ம், அடிகளார் பரிசளித்த ஒரு கதர் வேஷ்டிக்கு ரூ. 25-ம் காந்திநிதிக்கு அளித்தார். நெல்லூர் நகரத்தில் கிடைத்ததைத் தவிர, நெல்லூர் ஜில்லாவில் இதுவரை ரூ. 26,347 வசூலாகி யிருக்கிறது.

### ஸ்ரீவாகீசபக்த பாதசேகர சபை

வேத மடம் (வடமட்டம்)

ஸ்ரீமத் ஞானியார் மாணவர்கழகத் தலைவரும் தங்கலங்கருதாத் தமிழ்த் தொண்டரும் சைவப் பெரியாரும் ஆகிய திருவாளர் ம. ரா. குமார சுவாமிப் பிள்ளையவர்கள் பிறிவாற்றுமைக்கு 3-5-29ல் ஒரு பொதுக்கூட்டம் திரு சீனிவாசப்பிள்ளை தலைமையின்கீழ் நடை பெற்றது. அன்பரின் ஞாபகார்த்தமாக 'குமாரசாமியார்' வாசகசாலை யொன்று ஏற்படுத்தப்பட்டது என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

o o o

13-5-29ல் சாரன்பூரிலுள்ள ஒரு வீட்டில் போலீஸார் பரிசோதனையிட்டதில் பல வெடிகுண்டுகளும், மூன்று கைத்துப்பாக்கிகளும் கிடைத்தன. இதன் சம்பந்தமாக இருவர் கைதுசெய்யப்பட்டனர் என்று ஒரு செய்தி கூறுகிறது.

## உதிர்ந்த மலர்கள்

ரோசிச்: நீ உன் சத்துருக்களை நேசிக்கிறாயா? அப்படி நேசியாமலிருப்பது தவறு. அவர்கள் கெட்டிக்காரர்கள். அவர்கள் உனக்குத் தீங்கிழைப்பதைவிட அதிக பயன் படுவார்கள். உன் நண்பர்களைவிட அவர்கள் சாமர்த்தியம்வாய்ந்தவர்கள். உன் நண்பர்களைப்பற்றி உனக்குப் பெருமை இருப்பதைபோல் சத்துருக்கள் விஷயத்திலும் நீ பெருமை யுடையவனுக இருக்கவேண்டும்.

* * *

மகாத்மா காந்தி:—(புச்சிரெட்டி பாளையத்தில் நிகழ்த்திய ஒரு சொற்பொழிவில்) ஆந்திர தேசத்தில் இந்த ஊரே பணக்காரர்கள் நிரம்பிய ஊர் என்று நான் கேள்விப்படுகிறேன். அரசாங்கத்துக்கு ஒற்றர்கள் இருப்பதுபோல் எனக்கும் ஒற்றர்கள் இருக்கிறார்கள். அரசாங்க ஒற்றர்களிடத்தில் ஏதேனும் நற்குணங்கள் இருக்தால் அவைகளை நான் பின்பற்ற முடியாவிட்டாலும், அவர்களுடைய கெட்ட குணங்களையாவது நான் பின்பற்ற முடியும்.

* * *

மேற்படியார்:—நான் ஒரு பிக்ஷு (பிச்சைக்காரன்) இந்தியாவின் இலட்சக்கணக்கான ஏழைகளின் பொருட்டு நான் பிச்சை எடுக்கிறேன்.

* * *

பண்டித மதன் மோகன மாளவியா:—இந்தியாவில் கப்பல் கட்டுந் தொழிலுக்கு உபயோகப் படக்கூடிய மரங்கள் பல இருக்கின்றன. ஆனால் அந்தத் தொழிலில் நாம் சிறிதும் முன்னேற்ற மடையவில்லை.

* * *

மேற்படியார்:—ஐம்பது வயதுக்குட்பட்ட ஆண் பெண் அனைவரும், ஒழுங்காகத் தேசப் பயிற்சி செய்யவேண்டும் எனக்கு இப்பொழுது அறுபத்தெட்டு வயதாகிறது. நான் தவறுமல் தினந்தோறும் தேகாப்பியாசம் செய்துகொண்டு வருகிறேன்.

* * *

ஸ்ரீமான் கே. எஸ். சந்திரசேகர ஐயர்:—ஆத்ம சுயராஜ்யம் பெற்றுவிட்டால் அரசியல் சுயராஜ்யத்தைப் பெறுவது கடினமன்று.

* * *

ஸ்ரீமான் டேவிட்ஸன்:—எந்த அரசாங்கத்திடத்திலும், பிறருடைய உதவியின்றி, யுத்தத்தின் அவசியத்தைப் பற்றிய பிரசாரத்தைச் செய்யப் போதிய பணமில்லை. அப்படிச் செய்யவும் செய்யாது. சென்ற ஐரோப்பிய யுத்தம்நடைபெறுவதற்குப் போதிய பணத்தை உதவி அவ் யுத்தத்தை நடைபெறச் செய்தவர்கள் வியாபாரிகளே.

* * *

ஓர் அறிஞர்:—நாளையைப்பற்றிக் கவலைப் படாதே. இன்றைய கடமையைச் செய். இன்றைய ஆசைகளை எதிர்த்துப் போராடு. நீ பார்க்க முடியாத, பார்த்தாலும் தெரியாத விஷயங்களைப்பற்றிக் கவலைப் படாதே.

* * *

ஈதல்டெல்:—சாரமற்ற வாழ்க்கையைக் கூட இன்பமுள்ள வாழ்க்கையாகச் செய்து கொள்ளலாம். பாலைவனத்திலுள்ள மணலும் சூரிய வெளிச்சத்தினால் பிரகாசிக்க வில்லையா?

* * *

சர்தார் படேல்:— நமக்கு சிவாஜி தேவையா யிருந்தபோது ஆண்டவன் ஒரு சிவாஜியை அளித்தார். லோகமான்யர் வேண்டி யிருந்தபோது ஒரு லோகமான்யரை அளித்தார். வியாபாரசமூகத்தவராகிய பிரிட்டிஷாரோடு போராட இப்பொழுது ஒரு வைசியர் தேவை. அதற்காக வைசியராகிய மகாத்மா காந்தியை நமக்குக்கொடுத்திருக்கிறார்.

* * *

ஸ்டாப் போர்ட்ப்ரூக்:— மௌனமான அநுதாபத்தின் அறிகுறிகளான சில புன்சிரிப்புகள், சில இனிய வார்த்தைகள், சோபத்தைச்சிறிது அடக்கிக்கொள்ளுதல் இவைகள் ஒரு மனிதனைத் துக்கத்தினின்று சுகத்திற்குக் கொண்டுபோய் விடுகின்றன.

* * *

ராபர்ட்லூயிஸ் ஸ்டிவன்ஸன்:—நல்ல காரியங்களைச் செய்ய வேண்டுமென்ற அந்த ரங்க சுத்தியோடு எண்ணுகிறவர்கள் நல்ல வேலையைச் செய்தவர்களே யாகிறார்கள். சந்தோஷமாகவும் உறுதியுடனும் எண்ணப்பட்ட எண்ணங்கள் மனிதசமூகத்திற்கு எவ்வளவோ நன்மைகளைச் செய்கின்றது.

## முசோலினியின் மகத்துவம்

இத்தலியின் சர்வாதிகாரியான சினர் முசோலினியைப் பற்றி இத்தலியிலுள்ள பள்ளிக்கூடத்துப்பிள்ளைகளுக்கு ஒரு வித பயமும் பக்தியும் உண்டாகும் படியாகப் பாடங்கள் போதிக்கப்பட்டு வருகின்றன. முசோலினியின் உயிரைப்போக்கப் பல முயற்சிகள் செய்யப்பட்டு அவை கிறைவேறுமற்போனது பிள்ளைகளுக்கு அவரிடத்தில் இருக்கும் பக்தியை அதிகப்படுத்தியிருக்கிறது. பள்ளிக்கூடத்தில் படிக்கும் ஒரு மாணவி பின் வருமாறு எழுதுகிறார்:—

"முசோலினி எப்பொழுதும் வேலை செய்து கொண்டிருக்கிறார். தூங்குவதே இல்லை. பத்து நிமிஷங்களே அவர் கண்ணை மூடிக்கொள்கிறார். பிறகு எழுந்து போய் முகத்தைக் கழுவிக்கொண்டு வேலையைத் தொடங்குகிறார். அவரைக் கணவனுகப் பெற நான் விரும்புவேன். ஆனல் அவர் அடிக்கடி காயப்படுத்தப்படுகிறார் என்ற பயம் எனக்கு இருக்கிறது"

### "அணலை தீவுவித்தியா சங்கம்"

கிகழும் சுக்கிலஹூ சித்திரை மீ 23-வ (4-5-29) ஆதிவாரம் முற்பகல் 10-மணியளவில் யாழ்ப்பாணத்தைச்சேர்ந்த அணலை தீவு சதாசிவ வித்தியாசாலை மண்டபத்தில் ஸ்ரீமான் ஆ. சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் அக்கிராசனத்தின் கீழ் ஒரு மகாசன சபை கூடியது. டாக்டர் ஐ. சோமசுந்தரம் அவர்களால் "வித்தியாசங்கம்" என்னும் மருட நாமத்தைப் பிரேரிக்க, மகாசன சபையோரால் அங்கீகரிக்கப்பட்டுச் சங்க ஏற்பாடுகள் நிரூபிக்கப்பட்டன. பின்னர் சங்க அக்கிராசனராக டாக்டர். ஐ. சோமசுந்தரம் அவர்களையும், காரிய தரிசியாக ஸ்ரீமான் ஐ ஆறுமுகம் அவர்களையும் தனதிகாரியாக ஸ்ரீமான் க. சுவாமிநாதர் அவர்களையும் உத்தியோகஸ்தர்களாகவும், மற்றும், ஒன்பதின் மறை நிருவாக சபை அங்கத்தவர்களாகவும் தேர்ந்தெடுத்தனர். இந்த நிருவாக சபையார் தம்முளொருவரும், முன்பாடசாலை மானேசருமாயிருந்த ஆ. சுப்பிரமணிய பிள்ளை அவர்களையே வித்தியாசங்கப் பிரமாணங்களுக்கமைய பாடசாலை மானேசராக நியமித்தனர். அதன் பின்னர் பழைய கட்டிடத்தை வேரோடிருந்தி லமைத்து நடத்துவதற்கு அந்த இடத்தில் புதிய கட்டிடம் ஆரம்பிக்கவும், அத்திருப்பணி நிறைவேற்றற்குரிய ஏற்பாடுகளை யோசித்துத் தீர்மானிக்கப்பட்டன என்று காரியதரிசி தெரிவிக்கிறார்.

நாய்க்காக உயிரை இழந்தவர்:—மனோகர் அப்யங்கர் என்பார், நாகபூர் அஞ்ஜானி ஜெயில் சாலையில் தமது மோட்டாரை ஓட்டிச் செல்லுகையில், வழியில் குறுக்கிட்ட ஒரு நாயைக் காப்பாற்றும் பொருட்டுத் தம் மோட்டாரை மற்றொரு பக்கம் திருப்பினர். திருப்பிய வேகத்தினால் மோட்டார் தவறி, ஒரு பள்ளத்தில் வீழ்ந்து விட்டது. அதனல் இவருக்குப் பலமான காயமுண்டாகி வைத்தியசாலையில் மரண மடைந்தார்.

o o o

சென்னை ஜியார்ஜ்டவுன் ஆதியப்ப நாய்க்கன் தெரு புரோகாசிவ் யூனியன் பாடசாலையில் (17-5-29) வெள்ளிக்கிழமை மாலை 5-30 மணிக்குச் சுகாதார மந்திரி கனம் எஸ். முத்தையா முதலியார் அவர்களின் அவைத் தலைமையில் ஒரு கூட்டம் நடைபெறும். அதுகாலை பண்டிட் எஸ். எஸ். ஆனந்தம் அவர்களைச் சென்னை நகர பரிபாலன சபை அங்கத்தினராக அரசாங்கத்தார் நியமனம் செய்ததைப் பற்றி, பல சங்கங்கள் தங்களுக்குள்ள மகிழ்ச்சியை வெளிப்படுத்துவதோடு, அரசாங்கத்தினருக்கும் நன்றி கூறுவார்கள் என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

o o o

ஜெர்மனியிலுள்ள இன்ஸ் பாக்கில் சினிமா காட்சிக்காக நெப்போலியன் சண்டையில் ஒருபாகத்தைப் புகைப்பட மெடுப்பதற்காக ஏற்பாடு செய்யப்பட்ட விளையாட்டுச் சண்டை, வினையில்முடிந்தது. பிரஞ்சுபவேரியா உடைகளையணிந்திருந்த சிலரை, எதிர்கட்சி உடைகளணியப்பட்ட மற்றவர்கள் உண்மை உணர்ச்சிகொண்டே தாக்க வாரம்பித்து விட்டனர். இதனல் 35 பேர் காய மடைந்தனர்.

பரம்பக்குடி ஐக்யசங்க உதவித்தமிழ் இலவச வாசகசாலை:—சென்ற 1928ஹூ ஏப்பிரல்மீ தில் ஷெயூர் ஐக்ய நாணய சங்கத்தாரின் நன்கொடை ரூ. 100 ஐக்கொண்டு நிறுவப்பெற்ற இது காரம் நடை பெற்றதில் ஷெசங்கத்தார் இவ்வருடம் அது போற் பொருளுதவி செய்ய மறந்து விட்டதாலும் இப்பால் பரம்பக்குடி யூனியன் போர்டார் 1928-29ஹூதிற் கெனஅளித்த நன்கொடை ரூபா 50 ஐக்கொண்டு நடைபெற்று வருவதோடு இனியும் ஷெயூனியன் போர்டு நன்கொடையை சாசுவதமாக எதிர்பார்ப்பதாலும் ஷெ வாசகசாலைக் கமிட்டியினர் 11-5-29௳ கூட்டத்தில் வாசகசாலையின் பெயரை யூனியன் போர்டு உதவித்தமிழ் இலவச வாசகசாலையெனத் திருத்தி யமைத்திருப்பதாகவும் அபிமானிகளின் நன்கொடைகளை வந்தனத்துடன் ஏற்றுக் கொள்வதாகவும் காரியதரிசி எழுதுகிறார்.

* * *

ஸ்ரீமதி சரோஜினிதேவி அமெரிக்கப் பிரயாணத்தை முடித்து விட்டு, இப்பொழுது லண்டனில் தங்கியிருக்கிறார். இங்குப் பல விடங்களில் அவர் இந்தியாவைக் குறித்து விரிவுரைகள் நிகழ்த்த மாறு கேட்டுக்கொள்ளப் பட்டிருக்கிறார்.

* * *

கோயில்பட்டி அரசியல் வழக்கில் தண்டனை யடைந்த ஸ்ரீமான் தேவ நாகய்யா திருச்சி சிறையில் வெப்பத்தின் கொடுமையினால் மிகவும் கஷ்டப்படுகிறு ரென்றும், எடையில் மிகவும் குறைந்திருக்கிறு ரென்றும், இதனல் அவரை வேறு குளிர்ச்சியான விடத்திலுள்ள சிறைக்கு மாற்றவேண்டுமென்று அவருடைய சகோதரி ஸ்ரீமதி நாகம்மாள் ஜெயில் அதிகாரிகளுக்குக் கடிதம் எழுதியிருக்கிறுரென்றும் தெரிய வருகின்றன.

* * *

மங்களூரில், மசூதியின் முன் மேளவாத்தியம் முழக்கியதின் சம்பந்தமாக செம்படவர்களுக்கும், மாப்பிள்ளை ஜாதியாருக்கும் கலகம் உண்டாயிற்று. இக்கலகத்தையடக்கப் போலீசார் துப்பாக்கிப் பிரயோகஞ் செய்ததன் பயனுக, ஒரு மாப்பிள்ளை இறந்தார். இரு தரப்பிலும் பலர் காய முற்றனர். ஒன்பது மாப்பிள்ளைகள் மீதும், ஒன்பது செம்படவர்கள் மீதும் கி. பு. கோ. 107-வது பிரிவின்படி ஜாமீன் வழக்கு நடைபெறுகிறது. இப்பொழுது கலகம் அடங்கியிருக்கிறது.

* * *

திருநெல்வேலியி லுள்ள ஜேகத்தமென்னுங் கிராமத்தில் ஒரு பனை மரத்தில் வாழைக்குலை யொன்று உண்டாயிருக்கிறதாம். இவ்வதிசயத்தைக் கண்ணுற, பல மக்கள் வந்து கொண்டிருக்கின்றார்களாம்.

* * *

சென்னை இராயப்பேட்டை முத்துமுதலி வீதி 27 நெம்பர் மேல் மாடியிலுள்ள வேத ப்ரவசன மந்திரத்தின் ஆதரவில் (16-5-29) வியாழக்கிழமை மாலை 5-30 மணிக்குக் 'காயத்திரி மஹிமை' என்னும் பொருள் பற்றி ஸ்ரீசிவத்தியானந்த மஹா ரிஷியால் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தப் பெறும். ஸ்ரீமான் T. R. வேங்கடராம சாஸ்திரியார் அவர்கள் B. A., B. L. தலைமை வகிக்குமாறு கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறார் என்று நமக்கு அறிவிக்கப்படுகிறது.

* * *

தென்னிந்திய வீரசைவ ஜங்கமர்கள் 3-வது மகா நாடு மேமாதம் 25, 26க் தேதிகளில் திருச்செங்கோட்டில் கூடும் என்று நமக்கு அறிவிக்கப்படுகிறது.

* * *

சேலம் ஸ்ரீ விஜயராகவாசாரியாரின்உடல் நிலை:-திரிசிராப்பள்ளி டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் சேலம் ஸ்ரீ விஜயராகவாச்சாரியருக்கு 10-5-29ல் ஆபரேஷன்செய்தார். 9-5-29ல் ஆசாரியருக்குச் சுரம் 103-104 டிக்ரியிலிருந்தது. இப்பொழுது சுரம் குறைந்திருக்கிறது. டாக்டர் ராஜன், அவர் விரைவில் குணமடைவா ரென்று தாம் நம்புவதாகக் கூறுகிறார். ஸ்ரீமான் ஆசாரியார் மிகவும் பலஹீனமா யிருக்கிறார். ஆசாரியாரின் தேக அசௌக்யத்தைக் கேள்வியுற்ற மிகவும் வருத்துவதாகவும், உடனே அவர் உடல் நிலையை நெல்லூருக்குத் தந்திமூலம் அறிவிக்க வேண்டு மென்பதாகவும் மகாத்மா காந்தி, டாக்டர் ராஜனுக்கு ஒரு தந்திகொடுத்திருக்கிறார்.

* * *

பார்லிமெண்டு 10-5-29-ல் கலைக்கப்பட்டது. அது 25-6-29-ல் மீண்டும் கூடும்.

## கந்தரலங்காரச் சிறப்பு

சென்ற வியாழக்கிழமை சென்னை இராயப்பேட்டை வேதப்ரவசன மந்திரத்தில் சிவத்தியாகந்த மஹரிஷி செய்த பிரசங்கத்தின் சாரம் வருமாறு:—

'வாக்குக் கருணகிரி' எனப் புகழ்ந்து கூறப்பட்ட இந்நூலாசிரியரைப் போல 'மெய்யாக வோர் சொல் விளம்பினவரோ' யில்லை. இந்நூற்குப்பின் வந்த திருப்போரூரலங்காரமும் திருநெல்வேலியலங்காரமும் இதனோடு ஒப்புவமை பெறா. நூற்கு விநாயக வணக்கஞ் செய்யு முகத்தானே தனது அலங்கார மகிமையைத் தோற்றுவித்துள்ள தன்மையை 'படைவருகிற் சென்று கண்டுகொண்டேன்-களிற்றுக் கிளைய களிற்றினை' என்பதிலிருந்தறியலாம். 'ராவுத்தனை' சேவும் 'சொட்சமபட்சிதுரங்க' முதலிய பதப்பிரயோகங்களிலிருந்தும் பாஷா சமரஸமும் 'மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை' 'பரமகல்யாணிதன் பாலகன்' என்னும் சொற்றொடர்களிலிருந்தும் மதஸமரஸத் தோடு வசிய வாக்கு முள்ளவர் என்பது வெளியாகும். மனமானது மேலும் கீழுமாக அச்சத்திலும் துணிவிலும் மாறி மாறிச் சென்று கொண்டிருக்கும் பண்புள்ளது என்பதை 64, 65, 80, 81 பாட்டுக்களிலிருந்து அறியலாம். மயிலும் வேலும் பிரமாண்ட தத்துவத்தையும் ஞான தத்துவத்தையும் காட்ட வந்த அறிகுறிகளாம். ஒன்று கடற்சப்புறத்துங் கதிர்க்கப் புறத்தும் கனகசக்கத்திடர்க்கப் புறத்தும் திசைக்கப் புறத்தும் திரிந்து, மாசுத்தை மூட்டி வருநெடுங் கூற்றனையும் அஞ்சுவிக்கவல்லது. அதன் பீலியின் கொத்தசை படிசால் பட்டசைந்தது மேரு. அதனடியிட எண்டிசை வரை தூள்பட்ட; அத்தூளின் வாரிதிடர்ப் பட்டது. அம்மயூரம் கலாபம் விரிக்கின்றே காசலங்கப்பாட்டும் குலகிரி யெட்டும் விட்டோட வெட்டாத வெளிமட்டும் புதைபடும். மற்றொன்றாகிய வேலும் கையிற் சிறு வாளும் ஒருவர் சிந்தையிலுள்ள போது, அவர், யமனை 'வாராதகள் அந்தகா வந்த போதுயிர் வாங்குவனே' எனக்குருடனுனது பற்றி எச்சரித்து ஓட்ட வல்லவராவர். அவர் தந்தைக்கு முன்னந்தந்த அத்தனி ஞானவாளே முக்குற்றத்தோ டுள்ள முக்கிரந்திகளையும் அவிழ்க்க வுதவும் ஆயுதமாம். பின்னர் காலனது குலத்துக்கு வேலையின்றும். அத்தகைய வருளை யுதவும் முருகனைச் சாந்துணைப்போதும் மறவாதவர்க்கு ஒரு தாழ்வுமில்லை. அவருடைய விழிக்குத் துணை மென்மலரப் பாதம்; மெய்ம்மை குன்றா மொழிக்குத் துணை முருகா வெனு நாமம்; முன்பு செய்த பிராருத்தம் அனுபவிக்கும் போது அவன் பன்னிரு தோளும் துணையாம்; பயந்த தனிவழிக்குத் துணை வேலும்மயிலுமாம். இருந்த படியிருப்போர்க்கு அவனதருள் தானே வெளியாகும். அவனது அருளும், அவிழ்க்க அன்பாலடி தொழுதலும், ஐவர் பராக்சறலும், மனமும் பதைப்பறலும் பெற்றால் உகம் பொய்ச் சகம் பொய்ப் பராதிதவாகத்தை அநுபவிக்கலாகும். போக்கு வரவற்ற பொருள் ஒன்று வந்து தாக்கி மனோலயத்தைத் தந்து என்னைத் தன் வசமாக்கும். அத்தகைய என்னை நாளும் வினையும் கோளும் கூற்றமும் ஒன்றுஞ் செய்ய வியலாது. இவ்வகையாய்க் குருநாதன் சொன்ன கருத்தை மனத்தி லிருத்துவிரோல்யோக மின்றியே முத்திகைகண்டதாகும். இந்நிலையிலிருப்பவர் முடியாப்பிறவிக்கடலிற்புகார் முழுதுங் கெடுக்கும் மிடியால் விசனப்படார். இவ்வழியை மறந்தோர்க்கு விடாய்ப்படக் கூற்று வனூர்க்குச் செல்லும் வழியும் துயரும் பகரு வீர்களாக! என்று ஒரு கிருபர் எழுதுகிறார்.

---

திருவள்ளுவர் திருநாள்:—புலவர் பெருமானாகிய திருவள்ளுவர் அந்தமில் இன்பத்து அழிவில் வீடெய்திய திருநாளாகிய வைகாசி அனுட நட்சத்திரம் நாளாது வைகாசித்திங்கள் 10-ம் நாள் (23-5-29) வியாழக்கிழமை ஆனதால், அன்று சென்னைத் திருமயிலையில் அவரது திருக்கோயிலில் திருநாள் விழா பெரு சிறப்பாகக் கொண்டாடப்படும் அன்றியும், திருமயிலைத் திருவள்ளுவர் திருக்குறள் சுழகத்தார் சென்னைப் பச்சையப்பன் கலாசாலை மண்டபத்தில் திருவள்ளுவர் திருநாளைச் சிறப்பாகக் கொண்டாடுவார்கள். அதுகாலை பெரும் புலவர்கள் திருவள்ளுவரைப் பற்றியும் திருக்குறளைப் பற்றியும் சொற்பொழிவுகள் நிகழ்த்துவார்கள். ஆகலான், தமிழ் மக்கள் யாவரும் மேற்கூறிய தினத்தில் தத்தமது ஊரின்கண் திருவள்ளுவரது திருநாளைக் கொண்டாடி அவரது திருவருளைப் பெறுமாறு வேண்டுகின்றோம் என்று திருமயிலாப்பூர் திருவள்ளுவர் திருக்குறள் சுழகத்தார் அறிவிக்கின்றனர்.

o o o

சங்கர ஜயந்தி மகோற்சவம் 13-5-29 லிருந்து 22-5-29 வரை காஞ்சிபுரம் ஸ்ரீ சங்கராச்சாரியார் மடத்தில் நடைபெறும் என்று நமக்கு அறிவிக்கப்படுகிறது.

# குமாரசாமியார் பிரிவு

## இரங்கற்பாக்கள்

### I
### பண்டிதர் அ. கிருஷ்ணசாமியார் பாடியது

பூவில் ஞானி யாரென்றால் புலியூ ரடிகள் எனப்புவியில்
மேவிப் போற்றும் குணக்குன்றின் மேதைக் குமாரன் நாவலவன்
கோவ லடிகள் குமாரசாமி கொழுமைத் தமிழர் பெருநண்பன்
பூவின் வாழ்வு போதுமெனப் புலவர் வாழ்வைப் பெற்றனனால்

அந்தோ! அருமைத் தமிழணங்கே ஆரின் நாவில் நடம்புரிவை
சிந்தா மணியாய்ச் சொல்லடுக்கிச் சித்ரம் போலப் பேரவையை [போம்
முந்தாக் கேட்க "மணிமணி"யாய் மொழியும் சுவையார் வாய்க்கேட்
எந்தங் குமார சாமிபிள்ளை எங்கெங் கேயென் றேங்குவமால்.

### II
### ஞானியார் மாணவன் திரு. ந. ஆறுமுகம் பாடியது

திருக்கோவல் நகர்க்கடுத்த மணம்பூண்டி நல்லூரில் தினக ரன்போல்
மருக்கோல முடனியும் வந்துபிறந் துலகிலுள்ள மன்று தோறும்
தருக்கோலஞ் சிறிதுமின்றிப் பிரசங்கம் புரிந்துவந்த தக்கோய் மிக்கோய்
குருக்கோலங் கொண்டிலவும் குமாரசா மிப்புலமைக் குணம்வல் லோயே.

சிறந்தொளிரும் ஞானியாரா சிரமதீ நிறுவியதால் சிறக்கப் பெற்றோய்
திறந்தெரிந்த அடியவர்கள் தினந்தோறும் அவ்விடத்தில் திரளாக் கூடி
அறந்திறம்பாக் கல்வினிலை சமயநிலை நினதுநிலை யளத்த லாலே
இறந்துமிற வாமலொளிர் கின்றனைநீ யெனயாங்கள் இசைப்போ மன்னே.

### III
### வேளக்கிழார் - K. அருணாசலனார் பாடியது

புல்லுருகக் கல்லுருகப் புள்ளுருக மாவுருகப் புவியிலுற்ற
நல்லவர்கள் மனமுருக வினமுருக நாடுருக நகருருக நாகமேவுஞ்
செல்லுருகச் சேணுருக தினகரன் தண்மதியுருக செறிந்தமாசார்
அல்லுருகச் சென்றதென்னை குமாரசாமிப் பெரியோ யறைகுவாயே.

பன்னூலாங் கல்க்கடலை வாய்மடுத்திவ் வுலகுய்யும் படிக்குப்பெய்த
உன்னுவின் சொன்மாரிக் கிணையியம்ப வெம்மனோர்க் குண்டோவாற்றல்
தன்னாலே யியன்றளவு தாரணிக்கோ ருபகாரந்தான் செய்யாதான்
என்னுவ னிருந்தென்ன விறந்தென்ன பயனுண்டோ மிருநிலத்தே.

கற்றாருட் கற்றாரெனப் படுவருன் போலக்கடல் சூழ் மண்ணில்
மற்றாரை யெடுத்துரைப்பேம் குமரசாமிப் பெரியவ ளாலுன்னைப்
பெற்றாரைப்போல பெரும் பேறு பெற்றாருண்டு கொலோ பேசுங்காலைப்
பொற்றாது செறிகமலப் பதத் திறைவன்பாற் சென்ற பொருவிலோனே.

---





## மதுவிலக்குப் பிரசாரமும் அரசாங்கமும்

### மதுபானத்திற்குச் செலவழிக்கும் பணம் சாத்தானுக்குச் செலுத்தும் வரிப்பணமே

8-5-29ல் சேலத்தில் நடைபெற்ற ஒரு பொதுக்கூட்டத்தில் மதுவிலக்குச் சம்பந்தமாக ஸ்ரீமான் சக்ரவர்த்தி இராஜ கோபாலாச்சாரியார் நிகழ்த்திய சொற்பொழிவின் சாரம் வருமாறு:—

மிகச்சிறிய காரியத்தையும் எளிதில் நிறைவேற்றிக்கொள்ளமுடியாது. நாம் அடிக்கடி முயற்சி செய்தால்தான் ஆண்டவன் நமக்குத் துணை செய்வார். மற்றும், கஷ்டத்திற்காக நாம் அஞ்சுவதில் பயனில்லை. ஒரு காரியமும் கைகூடவில்லை யென்ற எண்ணமும் உங்களுக்கு வேண்டுவதில்லை. நமது முயற்சியும், கிளர்ச்சியும் அரசாங்கத்தாருடைய மனோபாவத்தைக்கூட மாற்றியிருக்கிறது. முதலில் அரசாங்கத்தார். நம்மைக் கண்டு பரிகாசம் செய்தார்கள்; நம்மை அசட்டை செய்தார்கள்; சிறையில் வைத்தார்கள். ஆனால் இப்பொழுதோ, மதுவிலக்குப்பிரசாரம் செய்வதாக அவர்களே கூறுகிறார்கள். இதற்காக நான்கு லட்சம் ரூபாய் பிரத்தியேகப்படுத்தி வைத்திருக்கிறார்கள். இந்தப் பணத்தை அவர்கள் எப்படி உபயோகித்தாலும் அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. காங்கிரஸுக்கு விரோதமாக வுள்ள கட்சியாருக்கு அநுகூலமாக அப்பணம் மறைமுகமாகத்தேர்தலில் உபயோகிக்கப்பட்டாலும் அதைப்பற்றி எனக்குக்கவலையில்லை. மதுவிலக்குப் பிரசாரம் செய்வது அவசியம் என்பதை அரசாங்கத்தார் அங்கீகரித்துக் கொண்டனரே அதற்காக, பொது ஜனங்களுடைய பணத்திலிருந்து நான்கு லட்சம் ரூபாய் கொடுப்பதில் எனக்குச் சந்தோஷமே. இப்பொழுது மதுபானத்திற்காக நாம் ஆறு கோடி ரூபாய் கொடுக்கிறோம். அப்படி இருக்க, இம்மதுபானம் தீமை பயப்பது என்பதை அங்கீகரித்துக் கொள்வதற்காக என் நான்கு லட்சம் ரூபாய் கொடுக்கக் கூடாது? நமது கிளர்ச்சி வீண் போகவில்லை. இதைப்பற்றிப் பலருக்கு அசட்டை எண்ணம் இருந்தது. அதுபோய், இப்பொழுது இம்மதுவிலக்கைப்பற்றியே தீவிரமாகவாதம் செய்யப்படுகிறது. நாம் ஒற்றுமையுடன் வேலை செய்தால் நமக்கு வெற்றி உண்டாவது நிச்சயம். மேனாட்டு வைத்திய நிபுணர்கள், சாராயம் முதலிய வஸ்துக்கள் விஷசம்பந்தப்பட்டவை யென்று அபிப்பிராயங்கூறியிருக்கிறார்கள். தேகத்திற்காவது, மனதிற்காவது அது நன்மைபயப்பதில்லை, மதங்களும், மதுபானம் கூடாதென்று கூறுகின்றன. மதுபானம் அவமானத்தை உண்டாக்குகிறது. குற்றங்களைச் செய்யத் தூண்டுகிறது. மிதமாகப் பானஞ் செய்வது, கடைசியில் அமிதத்தில் கொண்டுபோய் விடுகிறது. இது, ஜாதி வேற்றுமை பாராட்டுவதில்லை. மதுவியாபாரத்தை நாம் ஆதரித்து வந்தால் நாளடைவில் அது எல்லாரையும் நாசப்படுத்திவிடும். மதுபானத் தீமையினால் மட்டும் அரசாங்கத்தார் ஆறு கோடி ரூபா வருமானம் அடைகின்றனர். வருமான வரி அதிகமாயிற்றென்றால் வியாபாரம் செழித்தோங்குகிற தென்பது தெளிவாகும். கலால் வருமானம் அதிக மாகிற தென்றால் மதுபானமும் அதிக மாகிற தென்பது பெறப்படுகிறது. கலால் வருமானத்தைச் சேர்ந்த ஒவ்வொரு ரூபாயும் சாத்தானுக்கு நாம் செலுத்தும் வரிப்பணமாகும். அந்த ஒவ்வொரு ரூபாயும் அழிந்து போன குடும்பங்கள், பசிப்பிணியால் வாடும் பெண்டு பிள்ளைகள் இவைகளின் சின்னமாகும். சட்டசபையிலுள்ள நமது பிரதிநிதிகள் என்ன செய்கிறார்களென்பது நமக்குத்தெரியவில்லை. நமக்கு இவ்விஷயத்தில் அதிகாரமில்லையென்று நீங்கள் நினைக்க வேண்டாம். கலால் இலாகா, மந்திரிமார்கள்வசத்தில் இருக்கிறது. மந்திரியார்களுடைய நிருவாககாலம் உங்கள் பிரதிநிதிகள் விருப்பத்திலேயே இருக்கிறது. ஆதலின் இந்தக்கொடிய பழக்கத்தை நிறுத்தி விடுவது மந்திரிமார்கள் வசத்திலேயே இருக்கிறது. இதனை நிறுத்திவிட்டால் காலால் வருமானம் குறையுமே என்று மந்திரியார்கள் கூறுகிறார்கள். அரசாங்கத்தார், வேறு வருமானத்தை மந்திரிமார்கள் வசம் ஒப்புவியாவிட்டால் அவர்கள் உடனே ராஜீநாமா செய்ய வேண்டிய அவசியம். கலால் இலாகா வருமானத்தைக் கொண்டு ரஸ்தாக்கள்பள்ளிக்கூடங்கள் இவைகளை நிருவகிப்பதைவிட அவைகளை அடியோடு மூடி விடுவதே மேல். மதுபான வழக்கத்தை அடியோடு ஒழிக்கமுற்படும் பிரதிநிதிகளையே நீங்கள் சட்டசபைக்குத் தெரிந்தெடுத்தனுப்ப வேண்டும். இது சம்பந்தமாகக் கிளர்ச்சி செய்யக் காங்கிரஸும் தீர்மானித்திருக்கிறது. இந்தியாவிலுள்ள ஒவ்வொரு கிராமமும், நகரமும் தாலுக்காவும் இதுசம்பந்தமாக அமைப்புகள் ஏற்படுத்தவேண்டும். அரசாங்கத்தார், நமது கிளர்ச்சிக்கு செவி சாய்க்காமற் போனால், நாம் மதுபானக்கடைகளை மறியல் செய்ய ஆரம்பிப்போம்- பலாத்கார முயற்சிகளைத் தவிர, மற்றெல்லா அமைதியான முயற்சிகளிலும் நாம் இறங்கி வேலை செய்வோம். ஆதலின் சித்தமாயிருங்கள்.



## மணித்திரள்

கொச்சி சமஸ்தானத்தின் கலால் இலாகா வருமானம் பதினெட்டு லட்சம் என்று தெரிகிறது.

* * *

பிரிட்டிஷ் பத்திரிகாலயங்களில் ஒரு நிமிஷத்திற்கு எண்ணூறு பத்திரிகைகள் வீதம் அச்சடிக்க முடியும்.

* * *

அமெரிக்காவிலுள்ள பத்திரிகைப் பிரதிநிதிகளில் ஐந்நூறு பேர் வாஷிங்டன் நகரத்தில் மட்டும் இருக்கிறார்களாம்.

* * *

பூனையை வளர்ப்பவர்கள் நாயையும், நாயை வளர்ப்பவர்கள் பூனையையும் முறையே வெறுப்பது மனித சுபாவமாம்.

* * *

பனிக்கட்டியாலேயே பலவிதமான உருவங்கள் அமைத்து வைப்பது கானடாவிலுள்ள பல நகரங்களில் காணப்படுகிறதாம்.

* * *

ஒரு நிமிஷத்திற்கு நூற்றைம்பது வேட்டுகள் வீதம் பிரயோகம் செய்யக்கூடிய ஒரு துப்பாக்கியை ஸ்ரீமான் ஜே.எம். ப்ரௌனிங் கண்டு பிடித்திருக்கிறார்.

* * *

புடா பெஸ்தில் ஒரு படம் இருக்கிறதாம். இதை எழுத நான்கு ஆண்டு பிடித்தது. அரை ஏக்ரா விஸ்தீரணமுள்ள கான்வாஸும், இரண்டு டன் பெயிண்டும் பிடித்ததாம்.

* * *

1927-ம் வருஷத்தில் இங்கிலாந்தில் 175000 பேர் கப்பற் றொழிலில் ஈடுபட்டிருந்தனர். இவரில் 11359 பேருக்குக் காயம் பட்டிருக்கிறது 92 பேர் இறந்து விட்டனர்.

* * *

இங்கிலாந்தில் ஒரு கையிழந்த ஒருவன் பயானோ வாசிப்பதில் மிகவும் திறம்படைத்தவனாயிருக்கிறான். இன்னொருவன் ஒற்றைக் கையிழந்து, கண் பார்வையுமில்லாமல் நன்றாக டைப் அடிக்கிறான்.

* * *

சைமன் குழுவினர் லண்டன் போந்தபோது, பஞ்சாப் நிலச்சுவான்தார் சங்கத்தார் அவரை வரவேற்றனர் என்று தெரிவிக்கப்பட்டது. இச்சங்கத்தில் இரண்டு பேரே அங்கத்தினர் என்று ஒரு செய்தி கூறுகிறது.

* * *

அமெரிக்காவிலுள்ள சிவப்பு இந்தியரில் ஒரு பிரிவார், அடிக்கடி கூட்டங்கள் கூட்டுவதுண்டு. அதில் ஒற்றைக்காலால் நின்று கொண்டு ஒருவன் எவ்வளவு நேரம் பேச முடியுமோ அவ்வளவுநேரமே அவன் பேசலாமென்ற விதியுண்டாம்.

* * *

முப்பது வயதுக்கு மேற்பட்டும் ஐம்பது வயதுக்குட் பட்டும் உள்ள விவாகமாகாத ஆண்களும் பெண்களும் அஜீரணத்தால் கஷ்டப்படுகிறார்களென்று ஜர்மன் வைத்தியர் ஒருவர் அபிப்பிராயப்படுகிறார்.

* * *

ஜார்ஜ் மன்னரின் இளைய புதல்வருக்கு "தத்துவாய்" உண்டாம். எனவே, சென்ற வருஷம் அவர் ஸ்ரீமான் லோக் என்ற ஒரு வைத்தியரிடம் சிகிச்சை செய்து இப்பொழுது குணமடைந்திருக்கிறாராம்.

* * *

இங்கிலாந்திலுள்ள ஒரு தொழிற் சாலையில் அறுபத்திரண்டு வருஷகாலம் விடாமல் ஊழியம் செய்த ஸ்ரீமான் அட்டிமான் என்ற ஒருவர் இராஜ குடும்பத்தைச் சேர்ந்த பலரைச் சந்தித்திருக்கின்றனர்.

* * *

இங்கிலாந்தில் பதினைந்து லட்சம் பேர் யுத்த பென்ஷன் பெற்று வருகிறார்களென்றும் இதுவரை 91 கோடி முப்பது லட்சம் பவுன் உபகாரச் சம்பளமாகக்கொடுக்கப்பட்டு வந்திருக்கிற தென்றும் தெரிவிக்கப்படுகிறது.

* * *

சில குழந்தைகள், எப்பொழுதும் வாயில் கட்டை விரலை வைத்துக் கடித்துக்கொண்டிருப்பதை நாம் பார்க்கிறோம். அவ்வழக்கம் கெடுதலென்றும் அதனால் பற்களுக்குப் பழுது ஏற்படுகிறதென்றும் ஒரு வைத்தியர் அபிப்பிராயப்படுகிறார்.

* * *

அந்நிய நாட்டு ஸ்திரீகளை மணம் புரிந்து கொண்டிருக்கும் உத்தியோகஸ்தர்கள் அந்நியநாட்டி லாகாவிலும் கடற்படை இலாகாவிலும் உத்தியோகம் வகிக்கக்கூடாதென்று அங்கோரா அரசாங்கத்தார் ஓர் உத்தரவு பிறப்பித்திருக்கின்றனர்.

* * *

கிறிஸ்து நாதரைப்பற்றி டாக்டர்இ. ஸ்டான்லி ஜோன்ஸ் என்பார் ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். இதுவரை, இந்நூல் ஐம்பத்தேழு பதிப்புகள் செலவாயிருக்கின்றன; பதினைந்து பாஷைகளில் இந்நூல் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது.

* * *

சியால் கோட்டில் பதினைந்து மாணக்கர்கள், தங்களுடைய இரத்தத்தைக்கொண்டு, இனி கதரையே தரிப்பதென்று விரதம் பூண்டிருக்கிறார்களென்றும் இன்னும் சிலர் அப்படி செய்வார்களென்றும் 'அமிருத பஜார் பத்திரிகை' கூறுகிறது.

* * *

வடதுருவ தென் துருவப்பிரதேசங்களில் வியாதியைப்பரப்பும் எவ்விதப் பூச்சிகளும் இல்லை யென்றும் ஒருகாலத்தில், பூலோகத்தின் ஆரோக்கிய ஸ்தலமாக அது ஏற்படலாமென்றும் அங்கே ஜல தோஷம் நியுமோனியா முதலிய எதுவும் பிடிக்காதென்றும் ஓர் அறிஞர் அபிப்பிராயப்படுகிறார்.

* * *

ஸ்ரீமான் எல். எச். ஃளக்ஸ் டீன் என்ற கன்சர்வேடிவ் கட்சி அங்கத்தினர், சமீபத்தில் நடைபெறப் போகும் பிரிட்டிஷ் பார்லிமெண்ட் தேர்தலில் ஓர் அபேட்சகராக நிற்கப்போகிறார். இவர்நிற்பதில் என்ன விசேஷமென்றால் இவர் ஆறு அடி எழு அங்குலம் உயரம் இருக்கிறாராம். இவரே, காமன்ஸ் சபையில் மிகுந்த உயரமுள்ள அங்கத்தினராயிருப்பாராம்.

* * *

திபேத்தியர்கள், தேயிலையைச் செங்கல் போல் உருவமாக அமைத்துக் கோவேறு கழுதைகளின் மீது ஏற்றிச்செல்வார்கள். சாதாரணமாகத் திபேத்தியர்கள் தேயிலைப் பானத்தில் மிகுந்த பிரியமுள்ளவர்கள். குறைந்தது தினமொன்றுக்கு ஒவ்வொருவரும் இருபது கோப்பைத் தே நீராவது குடிப்பதுண்டாம். சிலர் எண்பது கோப்பை வரையிலுங்கூடகுடிப்பார்களாம்.

* * *

லீட்ஸ் நகரத்தில் பல வருஷங்களாக ஒருவன் கிழிந்த உடைகளுடனும், பழைய பூட்ஸுகளுடனும் தெருவில் உலவிச் செல்வதைப்பலரும் பார்த்திருந்தனர். இவனைச் சாதாரண ஓர் ஏழை யென்றே அனைவரும் எண்ணி, இவனைப்பற்றிப் பெரிதும் கவலை கொள்ளாமலே இருந்தனர். சென்ற ஜனவரி மாதத்தில் இவன் இறந்துவிட்டான். இவனுடைய வார்சுகள், இவன் வசித்து வந்த வீட்டைப் பரி சோதித்துப் பார்க்கையில் எழுபதினாயிரம் பவுன் இருந்ததாம்.

* * *

அமெரிக்கக் குடியரசின் தலைவரான ஸ்ரீமான் ஹெர்பர்ட் ஹூவர், வாரத்திற்கு இருமுறை, செவ்வாய்க் கிழமையும் வெள்ளிக் கிழமையும் எல்லாப் பத்திரிகைப் பிரதிநிதிகளையும்கண்டு பேசச்சித்தமாயிருப்பதாகவும் அவர்கள் அரசியல் சம்பந்தமாகக் கேட்கும் கேள்விகளுக்குத் தக்க விடை அளிப்பதாயும் தெரிவித்திருக்கிறார். அது தவிர, பிரசிடெண்டின் காரியதரிசி, தினத்திற்கு இருமுறை, பத்திரிகை நிருபர்களுக்குப் பேட்டி கொடுத்து அவர்களுக்கு வேண்டிய தகவல்களைத் தெரிவிக்கிறார்.

---

இங்கிலாந்தில் ஒருவன், இன்னும் நான்கு வருஷங்களில் தன் கண் குருடாய்ப்போய் விடுமென்று டாக்டர்கள் மூலமாகக் கேள்விப்பட்டு சங்கீதம் கற்றுக்கொண்டான். அதில் நல்ல தேர்ச்சியும் அடைந்தான். நான்கு வருஷம் ஆனதும், அவன் கண்கள் பார்வையிழந்தன. அவன் சிறிதும் தைரியத்தை இழவாமல், ஒரு நாடகக் கம்பெனியில் சங்கீதம் வாசிக்கும் உத்தியோகத்திற்கு மனுச்செய்து கொண்டான். அப்படியே அந்த உத்தியோகமும் அவனுக்குக் கிடைத்தது. தான் பாடவேண்டிய கீர்த்தனைகளையெல்லாம் மனப்பாடம் செய்து கொண்டு பாடினான். இப்படியே பத்தொன்பது மாத காலம் இந்த உத்தியோகத்தை வகித்தான்.

## உலகக் காட்சி

### கன்னி மேயோவும் இந்தியாவும்

"இந்தியத்தாய்" என்ற நூலை எழுதிய மிஸ் மேயோவை ஒரு பத்திரிகை நிருபர் சந்தித்துப் பேசியபொழுது, தாம் மேற்படி நூலை எழுதியதற்குக்காரணம் அரசியல் நோக்கமல்ல வென்றும், இந்தியாவில் இருப்பதாகத் தாம் நூலில் எழுதிய குறைகள் அமெரிக்காவிலும் இருக்கின்றன வென்பதைத் தாம் அங்கீகரித்துக்கொள்வதாகவும் ஆனால், அமெரிக்காவில் இப்பழக்கங்களை மதாசாரியர்கள் ஆதரிக்கவில்லை யென்றும், இந்தியாவிலோ மதாசாரியார்கள் இவைகளை ஆதரிக்கிறார்களென்றும் அதற்காகவே, அப்பழக்கங்களைத் தாம் கண்டித்ததாகவும் கூறினார்.

* * *

### செருப்பால் அடிக்கப்பட்ட முன்சீப்

ஒரு பள்ளிக்கூடத்துத் தலைமை உபாத்தியாயரான அஷாரிலால் என்பவரும், பிஜாய்பால் என்ற மற்றொருவரும் அக்பர்பூர் முனிசீப்பான ஜனுப்கலாத்-உத்-தீன் என்பவரை செருப்பால் அடித்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டு தண்டிக்கப்பட்டார்கள். இவர்கள் சம்பந்தப்பட்ட ஒரு வழக்கில், மேற்படி முனிசீப் இவர்களுக்கு விரோதமாகத் தீர்ப்புக் கொடுத்ததை வன்மம் வைத்துக் கொண்டு இவர்கள் இங்ஙனம் செய்தார்களென்று சொல்லப் படுகிறது. இருவரும் ஆறுமாதக் கடுங்காவல் தண்டனையும் நூறு ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டார்கள். இவர்கள் செய்து கொண்ட அப்பீலிலும் மேற்படி தண்டனை உறுதி செய்யப்பட்டது.

* * *

### எண்ணெய்க் கம் பெனிகளின் இலாபம்

இந்தியாவில் மண்ணெண்ணெய் பெட்ரோல் முதலியவைகளில்வியாபாரஞ்செய்யும் ஐரோப்பியக் கம் பெனிகள் ஏராளமான இலாபஞ் சம்பாதிக்கின்றன வென்ற விஷயம் அனைவர்க்கும் தெரிந்ததே. ஒவ்வொரு கம்பெனியும் 1927ம் வருஷத்தில் எவ்வளவு இலாபஞ் சம்பாதித்தன வென்பதைப் பற்றிய விவரம் மட்டும் ஈண்டுத்தருகிறோம் ஷெல் டிரான்ஸ் போர்ட் அண்ட் டிரேடிங் கம் பெனி -5369695 பவுன்; பர்மா ஆயில் கம் பெனி 1914772 பவுன்; ஆங்கிலோ-அமெரிக்கன் ஆயில் லிமிடெட் 257131 பவுன்; ஆங்கிலோ-பர் ஷியன் ஆயில் கம் பெனி 4635444 பவுன்.

* * *

### பசுவதை வேண்டாம்

வரப் போகிற பக்ரீத் பண்டிகையின் போது, பசுவதை செய்ய வேண்டாமென்றும், பசுவதை செய்யவேண்டு மென்று இஸ்லாம் மதம் போதிக்கவில்லையென்றும், பிறரிடத்தில் சமரச நோக்கத்துடன் நடந்து கொள்ளவேண்டுமென்று இஸ்லாம் மதம் போதிக்கிற தென்றும், இதை ஆதாரமாகக் கொண்டே, முஸ்லீம் மன்னர்கள் பசுவதையைஆட்சேபித்துநிறுத்தியிருக்கிறார்களென்றும், ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமையை உத்தேசித்து பசுவதை செய்யாமல், ஆடு முதலியவைகளை வேண்டு மானால் வதை செய்யலாமென்றும் க்வாஜா ஹஸன் நைஜாமி ஓர் அறிக்கை விடுத்திருப்பதாக "ஸ்டேட்ஸ்மான்" பத்திரிகை கூறுகிறது.

* * *

### மணி தெரிவிக்கும் மனிதன்

லண்டனில் சேவாய் ஹோட்டல் என்றொரு பெரிய ஹோட்டல் இருக்கிறது. அதில் 1505 கடிகாரங்கள் இருக்கின்றன. இவைகளுக்குச் சரியானபடி சாவி கொடுத்து ஒழுங்காக வைத்துக்கொள்ள பில் ஜென்னி என்றொருவர் இருக்கிறார். இவர் முப்பத்திரண்டு வருஷங்களாக அவ்வேலையைச் செய்து வருகிறார். இந்தப் பழக்கத்தினால், எந்தச் சமயத்திலும் இவ்வளவு மணி ஆயிற்று என்று ஒரு நிமிஷம் அல்லது அரை நிமிஷம் ஏற்றக்குறைச்சலாகக் கூறுவார்.

* * *

### ஸ்ரீமான் பி. எம். கபாலி

ஆகாய விமானங்களை இயக்குவதில் தேர்ச்சி பெற்ற முதல் இந்தியர் ஸ்ரீமான் கபாலி என்பவர். இவருடைய வரலாறு நமக்குப் பின் வருமாறு அறிவிக்கப்படுகிறது:—

ஸ்ரீமான் பி. எம். கபாலி 1928ம் வருஷம் ஏப்ரல் மாதம் இந்தியாவினின்றும் புறப்பட்டார். ஆகாய விமானங்களை உற்பத்தி செய்யும் தொழிலில் பயிற்சி பெறுவதற்காக இவர் ஜர்மனியிலுள்ள ஜங்கர்ஸ் ப்ளு கெக் வொர்க் கம்பெனியில் முதன் முதலாகச் சேர்ந்து கொண்டார், பிறகு அக்டோபர் மாதத்தில் லண்டனுக்குச் சென்று சோதனைஸ்திதி அறிதல், இயந்திரங்களை இயக்குதல் இவைகளில் பயின்று தேறினர். இவை சம்பந்தமான சங்கங்களில் அங்கத்தினராகச் சேர்ந்தார். பிறகு இம்பீரியல் ஏர்வேஸ் லிமிடெட் கம்பெனியில் சேர்ந்து, ஆகாய விமானங்களை இயக்குவதின் அநுபவ முறைகளைக் கற்றுக் கொண்டார். ஏப்ரல் மாதத்தில் தளபதி ஹெண்டர்ஸனால் நடத்தப்படும் ஆகாயவிமானப் பயிற்சி பள்ளிக்கூடத்தில் சேர்ந்து கொண்டு எல்லாப் பரீட்சைகளிலும் தேர்ச்சியடைந்தார். ஆகாயத்திலிருந்து சர்வே செய்தல், ஆகாய விமானத்திலிருந்து புகைப்பட மெடுத்தல் முதலியவைகளையும் இவர் கற்றுக் கொள்ளப் போகிறார். கச்லோஹாரா சமூகத்தைச் சேர்ந்த இவர் சேட் மேக்ஜி வல்லப தாவின் புதல்வராவார்.

* * *

### மிகப் பெரிய யுத்தக்கப்பல்

உலகத்திலே யுள்ள யுத்தக் கப்பல்களில் மிகப் பெரியன பிரிட்டிஷாருக்குச் சொந்தமான 'நெல்சன்' என்ற கப்பலும் "ரோட்னி" என்ற கப்பலுமே. "ரோட்னி" என்ற கப்பலைக் கட்டுவதற்கு மட்டும் 7488274 பவுன் ஆயிற்று. அதை நிருவகிக்க வருஷந்தோறும் 432960 பவுன் ஆகிறது. இக்கப்பலில் உள்ள மூன்று பீரங்கிகளிலும் நெருப்புப் பற்ற வைக்க மாத்திரம் 700 பவுன் செலவாகிறது. இந்தக் கப்பலில், டவுன்ஹால், மாதாகோயில், ஆஸ்பத்திரி, பலவித சாமான்களு மடங்கிய ஷாப்புகள், அநேக வீதிகள், டெலிபோன் முதலியன சகலமும் இருக்கின்றன.

* * *

### உலகத்தைச் சுற்றி வரும் தொப்பி

"நான் எங்கே போகிறேனென்று தெரியாது; எங்கெங்கே செல்லுகிறேனென்பதைப்பற்றியும் எனக்குக் கவலை கிடையாது. ஆதலின் என்னை வழிகாட்டி அனுப்பிவிடுங்கள். ஒரு நாள் எப்படியாவது என்வீட்டுக்கு நான் சென்று விடுகிறேன்" இச்செய்தியடங்கிய ஒருகாகிதம் ஒட்டப்பட்ட தொப்பி சமீபத்தில் அபர்டீனில் காணப்பட்டது. இதில் இன்னும் அறுபத்தைந்து விலாசங்கள் அடங்கிய காகிதங்கள் காணப்பட்டன. இந்தத் தொப்பி அமெரிக்கா ஐக்கிய மாகாணம், கானடா முதலிய எல்லாப் பிரதேசங்களையும் சுற்றி வந்திருப்பதாகத் தெரிகிறது.

* * *

### உண்மைத் தொண்டு

லிவர்பூல் நகரத்தில் ஏழைகள் வசிக்குமிடத்தில் ஸ்ரீமான் லீஜோன்ஸ் என்ற ஒருவர் வசித்து வருகிறார். இவர் நாற்பது வருஷங்களுக்குமுன், நல்லகுடும்பத்தில் சவுகரியமான இடத்தில் வசித்துக் கொண்டு வந்தார். பிறகு ஏழைகளின் வாழ்க்கை நிலையை அறிந்து, அவர்களுக்குத் தம்மாலான உதவியைச் செய்ய வேண்டு மென்ற நோக்கத்துடன் மேற்படி இடத்திற்குச் சென்று வசிக்கலானார். அங்கே சென்ற பிறகு, "நன்மை செய்வோர் சங்கம்" என்றொரு சங்கத்தை ஸ்தாபித்தார். இச்சங்கத்தார் இதுவரை எண்பதுலட்சம் நற்காரியங்களைச் செய்திருக்கின்றனர்.

* * *

### சமயத்தில் வந்துதவிய மகன்

அமெரிக்காவிலுள்ள மிராபலி நகரத்தில் ஒரு குடியானவர் இருந்தார். இவருடைய மகன், ஆகாய விமானங்களை ஓட்டக்கற்றுக் கொள்ள விரும்பினார். கையில் பணமில்லையென்றும், அவ்வாசையை விட்டு விட வேண்டுமென்றும் தகப்பனார் கூறிப்பார்த்தார். ஆனால், மகன் பிடிவாதமாயிருக்கவே, தனக்கிருக்கும் சொற்ப நிலத்தை அடகு வைத்துப் பணம் வாங்கிப்பிள்ளைக்குக் கொடுத்தார். பிள்ளை, பணத்தை எடுத்துக் கொண்டு மேற்படி தொழிலைக்கற்றுக் கொள்ளச் சென்று விட்டார். இப்படி பல வருஷங்கள் கழிந்தன. கடன் காரர்கள் தொந்திரவு அதிகமாயது. கடைசியில் நிலத்தை ஏலத்திற்கு விடுவதென்று தீர் மானித்து, குறித்த ஒரு நாளில் கோர்டில் ஏல விற்பனை நடைபெறுவதென்று தீர்மானிக்கப்பட்டது. அன்று மேற்படி நிலத்தை ஏலத்தில் எடுப்பதற்காகப் பல விவசாயிகள் கூடியிருந்தார்கள். கோர்ட் அதிகாரி ஏலங் கூறுவதற்காக வாய்திறந்தார். அச்சமயத்தில், ஆகாயத்தில் ஆகாயவிமான ஓசை கேட்டது. எல்லாரும் அண்ணாந்து பார்த்தார்கள். ஆகாயவிமானம் கீழிறங்கியது. அதிலிருந்து, மேற்படி விவசாயியின் மகனார் வந்து, அடமானத்தொகையை வட்டியுடன் சேர்த்துக்கொடுத்து நிலத்தை மீட்டுக்கொண்டு தமது தகப்பனாரின் கௌரவத்தையும் காப்பாற்றினார்.

என்கடன் பணிசெய்து கிடப்பதே

எவ்வுயிர்க்கும் அன்பாயிரு

நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ் சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில் லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணி வோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவா ளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்.)

சென்னை 1929ஹு மேமீ 15உ

## திருப்பாதிரிப்புலியூர் மகாநாடு

திருப்பாதிரிப் புலியூரில் வரும் வியாழக் கிழமை முதல் ஐந்து நாள் தொடர்ந்து கூடும் சைவர் மகாநாடு பொதுவாகத் தமிழ் மக்களினதும் சிறப்பாக சைவமக்களினதும் கருத்தை ஈர்த்திருக்கிறது. மகாநாட்டைப் பற்றிப் பல அறிஞர் பல திறக் கருத்துக்களை வெளியிட்டுவருகிறார். பல திறக் கருத்து வெளியீட்டுக்குக் காரணமாக நிற்பன திருநெல்வேலியில் கூடிய சைவப்பெரியார் தனிக் கூட்டத்தாரால் செப்பஞ் செய்யப்பெற்ற தீர்மானங்களே யாகும்.

அத்தீர்மானங்களை ஆராய்ந்து முடிவு காணுதற் பொருட்டே திருப்பாதிரிப் புலியூரில் சைவர் மகாநாடு கூடப்போகிறது. அம்மகாநாட்டில் தலைமைவகிக்கச் சுவாமி வேதாசலம் இசைந்தமை குறித்துக் களிபேருவகை யெய்துகிறோம். சுவாமிகள் நல்வழியில் மகாநாட்டைத் திறம்பட நடாத்துவர் என்பதில் ஐயமில்லை. சுவாமிகளின் கல்வியறிவு அநுபவம் முதலியவற்றை நாம் புதிதாகத் தமிழுலகிற்கு அறிவிக்க வேண்டுவதில்லை. திருப்பாதிரிப் புலியூர் மகாநாடு இனிது நடைபெறுமாறு எல்லாம் வல்ல இறைவனை வழுத்துகிறோம்.

மிக நெருக்கடியான காலத்தில் - திருப்பாதிரிப் புலியூரில் சைவர் மகாநாடு கூடும் இவ்வேளையில் - எமதுகருத்தைச் சிறிது வெளியிட விரும்புகிறோம். திருப்பாதிரிப் புலியூரில் கூடும் மகாநாடு சமய மகாநாடு என்பது வெளிப்படை. சமய மகாநாடுகளின் நடை முறைக்கும் பிற மகா நாடுகளின் நடை முறைக்கும் வேற்றுமையுண்டு என்று நாம் சொல்ல வேண்டுவதில்லை.

சமய மென்பது உயிருக்கும் கடவுளுக்கும் உள்ள தொடர்பைக் குறிக்கொண்டு நிற்பது. அத்தொடர்பு கொண்டு வாழ்தற்கே தனு கரண புவன போகங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. இவைகளைக் கருவியாக்கொண்டு சமயமெனும் கடவுள் நெறியில் நிற்க வேண்டுவது மக்கள்கடமை. உயிருடன் அன்பெனுங்கடவுளைத் தொடர்பு படுத்திக் கொள்ளாது இவ்வுலகில் வாழுநர் சமய மெனுங் கடவுள் நெறி நிற்பவராகார். சமய மெனுங் கடவுள் நெறியை நினைப்பூட்டுதற்குச் சில புறக் கோலங்களும் வழிபாடுகளும் ஆன்றோர்களால் காணப் பெற்றன. அவைகளையே சமயமெனக் கொள்வது அறியாமை. சில இடங்களில் புறக் கோலங்களே சமயமாகவுங் கருதப்பட்டு வருகின்றன. புறக் கோலங்கள் பூண்டும் வழிபாடு செய்தும் கடவுள் தொடர் பின்றி வாழ்வு நடாத்துவோரு மிருப்பர். புறக்கோலம் முதலியன இன்றியும் என்றும் ஆண்டவனுடன் தொடர்பு கொண்டு வாழ்வோருமிருப்பர். உலகம் பலவிதம்.

இந்நாளில் கடவுள் நெறியைப்பற்றியும் புறக்கோலம் வழிபாடு முதலியவற்றைப் பற்றியும் ஆங்காங்கே வாதப்போர் நிகழ்ந்து வருகிறது. அப்போர் பெரிதும் சீர்திருத்தம் என்னும் பெயரால் நிகழ்ந்து வரல் கண் கூடு. அச்சீர்திருத்த உலகமும் ஒருவழியில் இயங்குவதில்லை. ஒருவழியில் இயங்கல் அரிதென்றுங் கூறலாம்.

மெய்யறிவு பெறும்வரை மக்கள் 'சித்த விகார' மென்னும் பேய்க்கு இரையாகிக் கொண்டே யிருப்பர். 'சித்த விகார'த்தால் மனிதன் ஆற்றும் மாறுபட்ட செயல்களை என்னென்பேம்! என்னென்பேம்!!

நமது நாட்டில் 'சீர்திருத்த இயக்கங்கள்' பல தோன்றியிருத்தல் நேயர்கட்குத் தெரியும். அவ்வியக்கங்கள் சிலவிடங்களில் தூற்றப் படுகின்றன; சில விடங்களில் போற்றப்படுகின்றன. தூற்றுவோ ரனைவரும் சீர்திருத்தத்துக்கு மாறுபட்டோர் என்றும் போற்றுவோர் அனைவரும் அதற்கு உடன்பட்டோர் என்றும் உலகில் பொதுவாகக் கருதப் படுகின்றன. ஆனால் செயலிலோ?

சீர்திருத்தத்தைத் தூற்றுவோருள் புறக்கோல வழிபாடு இல்லாதவரு மிருக்கிறார். அதைப் போற்றுவோருள் புறக்கோல வழிபாடுகளைக் கொண்டவரு மிருக்கிறார். சீர்திருத்தத்தைத் தூற்றிக்கொண்டு நாடோறும் மணியடித்துக் கடவுள் பூசை செய்யாமலும், திருவிழா முதலியவற்றுக்குச் செல்லாமலும் சிலரிருத்தலும், அதைப் போற்றிக் கொண்டு சிலர் நாடோறும் மணியடித்துக் கடவுள் பூசை செய்வோராய், கோயில்களில் திருவிழா நடாத்துவோராய், கோயிலறந் தலைமைப்பதவிக்குப் போரிடுவோரா யிருத்தலும் நமக்குத் தெரியும். இம்மாறுபாடுகட்குக் காரணமென்னை? 'சித்த விகார' மன்றி வேறென்னை? 'சித்த விகாரம்' மனிதனை இன்றொன்று செய்யத்தூண்டும்; நாளை அதற்கு மாறுபட்ட வேறொன்றை நிகழ்த்தத் தூண்டும். இது 'சித்த விகார' இயல். விரிவு மனோதத்துவ நூல்களிற் காண்க.

சமயம் அல்லது கடவுள் நெறி என்பது 'சித்த விகாரம்' அல்லது பொய்யறிவு என்பதைக் கடந்து நிற்பது. அந்நெறி என்றும் ஒரு பெற்றியாயிருப்பது. 'சித்த விகார'த்தால் மனிதன் அதைப் பன்மையாகக் கொண்டு இடர்ப்படுகிறான். சில வேளைகளில் 'சித்த விகார'முடைய இம்மகன் கடவுள் நெறி பழுதுபட்டதெனக்கருதி அதைத் திருத்தவும் முயல்கிறான். அந்தோ! இவன் திருந்தற்குப் பதிலாக அதைத் திருத்த முயல்வது என்ன அறியாமை! இது 'சித்த விகார'க் கலக்கம்! "சித்த விகாரக் கலக்கந் தெளிவித்த வித்தகத் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பி" எனவரூஉம் மணிவாசகனார் திருமொழியை ஊன்றிநோக்கி உண்மையுணர்க.

'சித்த விகார'த்தைக் கடந்தொளிரும் ஒன்றைச் 'சித்த விகார'க்கண்ணால் நோக்கி மயக்குறும் மனிதன் தனது 'சித்த விகார'த்தைப் போக்கவே முயலல் வேண்டும். அம்முயற்சிக்குத் துணையாக, 'சித்த விகாரம்' நீங்கிச் செயற்கருஞ் செயல்களைச் செய்து கடவுள் நெறி உணர்த்திய பெரியோர்கள் வழி நிற்கப் பயிலல் வேண்டும். அப்பயிற்சிக்கென ஏற்பட்ட முறைகள் பலப்பல. அம்முறைகள் பெரிதும் கால தேச வர்த்தமானத்தை யொட்டிக் கோலப்படுவன.

கடவுள் வழிபாட்டிற்குரிய முறைகளை ஆராய்ந்து பார்த்தால் அவைகள் பெரிதும் உடல் காப்புக்கெனக் கோலப்பட்டனஎன்பது நன்குபுலனாகும். உடல் நலன் உயிர் நலனைப் பொறுத்து நிற்றலான் உடல்நலனுக்கெனக் கடவுள் நினைவூட்டும் முறைகளும் நமதுநாட்டவரால் கோலப்பட்டன. அம்முறைகளையே சமயமென்றும் கடவுள் நெறியென்றுங் கொள்வது அறியாமை. முறைகளில் சில அவ்வப்போது பழுதுபடலுமுண்டு. அப்பழுதுகளை ஒழுங்குபடுத்த மக்கள் முயலலாம்.

கோயில்களை எடுத்துக் கொள்ளலாம். தொடக்கத்தில் கோயில்கள் நன்னோக்கத்துடன் அமைக்கப்பட்டன. பின்னாளில் அக்கோயில்களில் சில ஆபாசங்கள் குடியேறின. அவ்வாபாசங்களைத் தொலைக்கக் கடவுள் நெறி வேட்டு நிற்போர் முயன்றே தீரல் வேண்டும். தற்போதைய கோயில்களிற் பெரும்பான்மையன அடி முதல் நுனி வரை சீர்திருத்தத்தை எதிர்நோக்கி நிற்கின்றன. அச்சீர்திருத்தத்தால் 'கடவுள் போகும் சமயம் போகும்' என்று சிலர் கூக்குரலிடுகிறார். அக்கூக்குரலுக்கு அஞ்சுவது கடவுளை மறப்பதாகும். ஆகலான் அன்பர்கள் அஞ்சாநெஞ்சங்கொண்டுகோயில் சீர்திருத்தங்களில் உழைக்க முன் வருவார்களாக.

திருப்பாதிரிப் புலியூரில் கூடும் சைவ நன்மக்கள் பலவேறு துறைகளிற் கருத்தைச் செலுத்தாது கோயில் சீர்திருத்தத்தில் மட்டுங் கருத்தைச் செலுத்திப் பொருந்திய தீர்மானங்கள் நிறுவுவார்கள் எனநம்புகிறோம். பல சீர்திருத்தங்களில் கருத்திருத்திப் பல தீர்மானங்களை நிறுவிச் செயலின்றிக் கிடத்தல் நாட்டுக்கு நலஞ் செய்வதாகாது. இப்பொழுது சமய உலகில்வேண்டற்பாலது கோயில் சீர்திருத்தம் என்று நாம் சொல்லவேண்டுவதில்லை. கோயில்களில் சீர்திருத்தம் நிகழ நிகழ மற்ற இடங்களிலும் மற்ற சீர்திருத்தங்கள் தாமே நிகழ்ந்து கொண்டு போகும். கோயில் சீர்திருத்தம் மிகமிக இன்றியமையாதது; காலத்துக் குரியது.

இரண்டாவது மடங்களைப் பற்றிய சீர்திருத்தம். மடங்களின் தற்கால நிலையை விரித்துக்கூற வேண்டுவதில்லை. மடங்களின் சீர் குலைவே சைவ உலகின் சீர் குலைவு என்று சொல்லவும் வேண்டுமோ? மடங்களின் வருவாய் சைவ உலகிற்குப் பயன்படல் வேண்டும். அது களியாடல்களுக்குப் பயன்படலாகாது. கோயில் மடங்களைப் பற்றிச் சில தீர்மானங்கள் நிறைவேறப் பெறல்வேண்டும். கடவுள் உண்மையிலும், சமய குரவர்களிடத் தன்பிலும் உறுதி கொள்ளுமாறு மக்கட் கறிவுறுத்தப் பிரசார வேலை செய்யும் முறைகளைக் கொண்ட சில தீர்மானங்களும் நிறை வேறல் வேண்டும். இத்தீர்மானங்களைச் செயலில் கொணரச் சைவ சபைகள் முயலல் வேண்டும்.

தீர்மானங்கள் தொகையில் சுருங்கின் செயல் பெருகு மென்பது எமது கருத்து. சமயமகாநாடுகள், வேறு பல மகாநாடுகளின் அடிச்சுவட்டைப் பற்றி வெற்றுரைத் தீர்மான உலகிலும் ஆரவார உலகிலும் இறங்குவது கூடாது. 'சித்த விகார'முடைய மனிதனுக்கு இன்றொன்று மெய்யாகத் தோன்றும். நாளை அஃதே அவனுக்குப் பொய்யாகத் தோன்றும். இம்மனிதனா கடவுள் நெறியைப் பண்படுத்த வல்லான்? கடவுள்நெறியை எவரும்பண்படுத்த வேண்டுவதில்லை. ஏழை மனிதன் பண்பட முயல்வானாக. அதற்குரிய நிர்ணயங்களை மட்டும் நிறுவுவானாக.

"நினைத்தொறுங் காண்டொறும் ..."

"தினைத்தனை யுள்ளதோர்
பூவினிற்றே னுண்ணாதே
நினைத்தொறுங் காண்டொறும்
பேசுந்தொறு மெப்போதும்
அனைத்தெலும் புண்ணெக
ஆனந்தத் தேன்சொரியுங்
குனிப்புடை யானுக்கே
சென்றூதாய் கோத்தும்பீ."
—திருவாசகம்.

## பார்தோலி வெற்றி

இந்தியாவில் நிலத்தீர்வை விதிக்கும் சம்பந்தமாகச் சீர்திருத்தங்கள் செய்யப்பட வேண்டுமென்று சட்ட சபைகளில் பல ஆண்டுகளாகக் கிளர்ச்சி செய்யப்பட்டு வருகிறது. இச்சீர்திருத்தம் எவ்வளவு இன்றி யமையாதது என்பது, இதுகாலை, பார்தோலி சம்பந்தமாக வெளியாயிருக்கும் அறிக்கையினால் நன்கு புலனாகும். பார்தோலி தாலுகாவிலும் சோராஸி தாலுகாவிலும், பம்பாய் அரசாங்கத்தார் மறு பைசல் செய்து நூற்றுக்கு இருபத்திரண்டு வீதம் நிலத் தீர்வையை உயர்த்தி விட்டனர். இவ்வரி உயர்வு கூடாதென்றும், போதிய ஆதாரமின்றியே வரி உயர்த்தப் பட்டிருக்கிறதென்றும், இதற்கு நிலவரிச் சட்டம் இடங் கொடுக்க வில்லை யென்றும் இதைப்பற்றி விசாரணை செய்யவேண்டுமென்றும் பார்தோலி வாசிகள் கூக்குரலிட்டார்கள்; அரசாங்கத்தார் செவியில் ஏறவில்லை. பல விண்ணப்பங்கள் அனுப்பப் பட்டன. அரசாங்கத்தார் கண் திறக்கவில்லை. கடைசியில் சர்தார் வல்லபை படேலின் தலைமையின்கீழ் வரிகொடா இயக்கம் தொடங்கப்பட்டது. அஹிம்சையையும்உண்மையையும் அங்கங்களாகக்கொண்ட இவ்வியக்கத்தை ஒடுக்க மூர்க்க சக்தி எழுந்தது. பலர் சிறை புகுந்தனர்; நிலங்கள் ஜப்தி செய்யப்பட்டன; பல இன்னல்கள் நேர்ந்தன. ஆயினும் காந்தியடிகளின் ஆதரவு பெற்ற பார்தோலி வாசிகள் அஹிம்சா தர்மத்தினின்று சிறிதும் பிறழவில்லை. இறுதியாக, ஆன்ம சக்தி முன்னர், மூர்க்க சக்தி தலை வணங்கியது. பார்தோலி வாசிகள் விரும்பியபடி மறு பைசல்சம்பந்தமாக விசாரணை புரிய அரசாங்கத்தார் ஒத்துக்கொண்டனர். வரிகொடா இயக்கமும் நிறுத்தப்பட்டது. ஜப்தி செய்யப்பட்ட நிலங்கள் அவரவர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்பட்டன.

அரசாங்கத்தார் கூறியபடி ஸ்ரீமான் ஆர். எஸ். ப்ளூம் பீல்ட், ஸ்ரீமான் ஆர். எம். மாக்ஸ்வெல் என்ற இருவரை விசேஷ உத்தியோகஸ்தர்களாக நியமித்தனர். இவருடைய அறிக்கை இப்பொழுது வெளிவந்திருக்கிறது. இவர், சுமார் ஐம்பது கிராமங்களில் விசாரணை நடத்தி யிருக்கின்றனர். மறு பைசல் சம்பந்தமாகப் பல தவறான முறைகள் அநுஷ்டிக்கப்பட்டன வென்றும், குத்தகை சம்பந்தமாகவும் நிலவிக்கிரய சம்பந்தமாகவும் வைக்கப் பட்டுள்ள தஸ்தாவேஜுகள் குறைபாடுள்ளனவா யிருக்கின்றன வென்றும், இவைசம்பந்தப்பட்ட புள்ளி விவரங்கள் தவறாயிருக்கின்றன வென்றும் இவர்கள் கூறுகிறார்கள். அவைகளை ஆதாரமாக வைத்துக்கொண்டு நிலத் தீர்வையை உயர்த்துவது நியாயமாகாது என்றுஇவர்கள்தெளிவாக எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். கடைசியில் நூற்றுக்கு இருபத்திரண்டு வீதம் வரியை உயர்த்தியிருப்பது முறையன்று என்றும், இரண்டு தாலுகாக்களையும் சேர்த்து சராசரி நூற்றுக்குச் சுமார் ஐந்தரை வீதம் வரி உயர்வு செய்யலாமென்றும் சிபார்சு செய்திருக்கிறனர்: இதனை அரசாங்கத்தாரும் அங்கீகரித்துக்கொண்டிருக்கின்றனர். ஆனால், இதனைக் கொண்டு பார்தோலி வாசிகள் திருப்தி யடைவார்கள் என்று கூற முடியாது. தங்கள் குறை நியாயமான தென்பதை அரசாங்கத்தார் உணர்ந்து கொண்டதைக் குறித்து அவர்கள் மகிழ்ச்சியடையலாமே தவிர, வரி உயர்வைக்கண்டு - அது நூற்றுக்கு ஐந்தரை வீதமாக இருந்தபோதிலும் - மகிழ்ச்சியோ திருப்தியோ அடையமாட்டார்கள் என்பது திண்ணம். ஆனால், நிலத்தீர்வை சம்பந்தமாகச் சீர்திருத்தங்கள் விரைவில் இந்தியாவின் எல்லா மாகாணங்களிலும் செய்யப்பட வேண்டும் என்பதன் அவசியம் இவ்வறிக்கையினின்று நன்கு புலனாகிறது.

பார்தோலியில் வரிகொடா இயக்கம் சாத்துவிக முறையில் நடை பெற்றபோது, உலகமுழுவதும் அவ்வியக்கத்தை ஆவலுடன் கவனித்துக் கொண்டு வந்தது. கிராமவாசிகள் பொறுமையையும் ஒற்றுமையையும் காட்டினார்கள். இவர்களை நடத்திச் சென்ற தலைவர்கள், நிதான புத்தியுடனும் முன் யோசனையுடனும், அஹிம்சைக் கொள்கையில் முழு நம்பிக்கை யுள்ளவர்களாயும் இருந்தார்கள். மகாத்மாகாந்தி இவ்வியக்கத்திற்கு நேர்முகமாகத் தலைமை பூண்டு நடத்தா விட்டாலும், தமது முழு ஆதரவைக் கொடுத்து வந்தார். எனவே, பார்தோலியின் வெற்றி காந்தீயத்தின் வெற்றி என்று கூறுவது மிகையாகாது.



## "பாரதி"

இப்பெயர் வாய்ந்த திங்கள் இதழ் ஒன்று வரப்பெற்றோம். இதன் ஆசிரியர் திருவாளர் ரா. நாராயணசாமி செட்டியார், "தேவாங்க மித்திரன்" என்னும் பத்திரிகைக்கு ஆசிரியராயிருந்தவர்; "ஏலவிவசாயி" என்னும் பத்திரிகைக்கு ஆசிரியராயிருப்பவர். இவர்க்கு மொழியினிடத்தும், சமயத்தினிடத்தும், நாட்டினிடத்தும் தணியாக் காதல் உண்டு. இக்காதல் எழுச்சிக்குக் காரணம் இவருக்குள்ள பலதுறை ஆராய்ச்சியேயாகும். திருவாளர் செட்டியாரவர்கள் தமது அரிய பொழுதைப் பெரிதும் நூல்கள், பத்திரிகைகள் முதலிய வற்றைப் படிப்பதிலேயே கழித்து வருவோ ரென்பதை நாமறிவோம். மேல்நாட்டு உலகியல் துறைகள் பலவற்றில் திருவாளர் செட்டியா ரவர்கள் பேராராய்ச்சி யுடையவர்; பத்திரிகை துறையைப்பற்றி மேல்நாட் டறிஞர் பலர் எழுதிய பன்னூல்களை வரவழைத்துப் பயின்று பத்திரிகைகளில் வல்லுநராயினர். நமது நாட்டில் பத்திரிகை யியல் உணர்ந்து பத்திரிகை நடாத்துவோர் மிகச் சிலர். அவருள் ஒருவர் அன்பர் நாராயணசாமி செட்டியார்.

தற்போது தமிழ்நாட்டில் பத்திரிகை உலகம் உற்றுள்ள நிலையை விரித்துரைக்க வேண்டுவதில்லை. தமிழ்ப் பத்திரிகை உலகம் வறுமையுற்றுள்ள இவ்வேளையில், பத்திரிகையியல் வல்லார் ஒருவர் தமிழ்ப்பத்திரிகை ஒன்று நடாத்த -அதினும் தேசியப் பத்திரிகை நடாத்த-முன்வந்தமை குறித்து மகிழ்வெய்துகிறோம்.

பத்திரிகைக்குப் "பாரதி" என்னும் பெயர் சூட்டியது பல்லாற்றானும் பொருத்த முடையதாகும். நமது பாரதத் தாயின் பெயரை நினைவூட்டும் இப்பெயர்— நமது தமிழ்க்கவி பாரதி நினைவூட்டும் இப்பெயர்—எவ்வாற்றானும் போற்றற் குரிய தென்று நாம் கூற வேண்டுவதில்லை.

பெயருக்கேற்ற பொருளும், அமைப்பும், வனப்பும், பிறவும் செறிந்து கிடக்கின்றன. முதல் இதழ்க்கண் கடவுள் வணக்கம், நாட்டுவணக்கம், தமிழ் வணக்கம் என்னும் மூன்றும் காட்சியளித்தல் நெஞ்சைக் கவர்கிறது. ஆசிரியர் வரைந்துள்ள முகவுரை அவரது பத்திரிகை யுலக ஆராய்ச்சியைச் செவ்வனே புலப்படுத்துகிறது.

அம்முகவுரையின் ஒரு பாங்கர் அயல் நாட்டுப் பத்திரிகைகளின் நிலையைப் பற்றிய கட்டுரை நமது நாட்டார் கருத்தை ஈர்க்கும் என்பதில் ஐயமில்லை. ஒவ்வொரு நாட்டையும் குறிப்பிட்டு அவ்வந்நாட்டுப் பத்திரிகைகளின் நிலையை ஆசிரியர் முறையே விளக்கு கூறியிருக்கிறார். இக்குறிப்பால் ஆசிரியர் எத்துணைப் பத்திரிகைகளுடன் உறவு கொண்டுள்ளாரென்பது விளங்குகிறது.

"பாரதி"யில் போந்துள்ள கட்டுரைகள் பல வாழ்வை வளம்படுத்தும் முறையில் வரையப்பட் டிருக்கின்றன. வாழ்வுக்குரிய பலதிற கட்டுரைகள் "பாரதி"யில் ஒளிர்கின்றன. கல்வி கேள்விகளில் வல்ல ஆண்பாலாரும் பெண்பாலாரும் "பாரதி"க்குக் கட்டுரை வரைந்து வருவது தமிழ் நாட்டுக்குப் பெரு விருந்தளிப்பதாகும். பத்திரிகை நலம் பல "பாரதி"யில் பொலிகின்றனவென்று சுருங்கக்கூறலாம்.

நாட்டைத் திருத்த வேண்டுமென்னும் நோக்குடன் "பாரதி"யை நடாத்தப் புகுந்த அன்பர் நாராயணசாமியாருக்கு நமது வாழ்த்து உரியதாக.

சந்தா விவரம்:—உள்நாடுகளுக்கு வருஷத்திற்கு ரூ. 2-0-0. வெளி நாடுகளுக்கு வருஷத்திற்கு ரூ. 2-8-0. விலாசம்: "பாரதி" ஆலயம், உத்தமபாளையம், மதுரை ஜில்லா.

## இடியேறு

### நீதிபதி கூட்ஸ் டிராட்டர்

சென்னை உயர்தர நீதி மன்றத்தின் பிரதம நீதிபதியாயிருந்த ஸர்முர்ரே கூட்ஸ் டிராட்டர் இங்கிலாந்துக்குச் சென்று கொண்டிருந்தபோது, வழியே கப்பலில் மரண மடைந்து விட்டார் என்று அறிந்து வருந்துகிறோம். இவர் சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னர் சென்னை உயர்தர நீதி மன்றத்தில் ஒரு நீதிபதியாக நியமிக்கப்பட்டு, ஐந்து ஆண்டுகளுக்கு முன்னர் பிரதம நீதிபதியாக நியமிக்கப்பட்டார். விஷயங்களை விரைவில் கிரகிக்கும் ஆற்றல் இவருக்கு உண்டு. சென்ற சில ஆண்டுகளாகவே, இவர் நோய்வாய்ப் பட்டிருந்தார். இவருடைய குடும்பத்தாருக்கு நமது மனமார்ந்த அநுதாபம்.

### மன்னர் பேச்சு

பார்லிமெண்டைக் கலைக்குமுன்னர், மன்னர்பிரான் செய்த பிரசங்கத்தில் இந்தியாவைப் பற்றி ஒரு குறிப்பு காணப்படுகிறது. சைமன் குழுவினருடன் மாகாண சட்டசபைகளால் நியமிக்கப்பட்ட கமிட்டிகளும் இந்திய மத்தியக் கமிட்டியும் ஒத்துழைத்தன என்பதே இக்குறிப்பின் சாரம். இந்தியாவிலுள்ள பொதுஜனங்கள் சைமன் கமிஷனை ஆதரித்ததாக மேற்படி பிரசங்கத்தில் காணப்படாம லிருப்பது குறிப்பிடத்தக்கது. ஸர்ஜான் சைமனே, இப்பாகத்தைப் படித்துத் திருப்தி யடைந்திருப்பார் என்று நம்புகிறோம். சைமன் கமிஷனர் இந்தியாவில் சுற்றுப் பிரயாணஞ் செய்த காலையில், அவர்களை இந்தியர்கள் மனப்பூர்வமாக வரவேற்றார்களென்றும், அவர்களுக்கு வழங்கப்பட்ட உபசாரப் பத்திரங்களுக்கு அளவில்லை யென்றும் ஆங்கிலோ இந்தியப்பத்திரிகைகள் கூறிவந்தன. அவை, மன்னர்பிரான் பேச்சிலிருக்கும் குறிப்பைக் கண்டு அடங்கும் என்று கருதுகிறோம். ஆனால் சென்னை மாகாணம், சைமன் வரவேற்பு விஷயத்தில் ஒரு தனிக் கௌரவத்தை வகித்திருக்கிறது. சென்னை நகரசபை ஒன்றே, கடற்றுறை நண்ணி, சைமன் கமிஷனுக்கு உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்தது. மன்னர் பேச்சு மறக்கப் பட்டுவிட்டாலும், நமது நகரசபையின் செய்கை எப்பொழுதும் மறக்கப் படாது. மன்னர்பிரானின் பேச்சில், இந்தியாவைப் பற்றி வேறெவ்வித குறிப்பும் இல்லாம லிருப்பது கவனிக்கத் தக்கது.

### பம்பாய் வேலை நிறுத்த நிலை

மில் முதலாளிகள் வேலை நிறுத்தக் காரர்கட்கு ஏப்ரல் மாதக் கூலிகொடுக்க மறுப்பது குறித்து முதலாளிகள் சங்கத்திற்கும், கிர்ணி கம்கார் சங்கத்திற்கும் வாதம் நிகழ்ந்து வருகிறது. முதலாளிகளும், வேலை நிறுத்தக்காரர்களும் பிடிவாதமாக இருப்பதால், இன்னும் ஒரு முடிவு ஏற்படவில்லை. வேலை நிறுத்தக்காரர்களில், அநேகர் வேலைக்குத்திரும்புவதால், 50 மில்கள் வேலை செய்ய ஆரம்பித்திருக்கின்றன. சுமார் 50,000 பேர் வேலைசெய்து வருகின்றனர். தொழிலாளரிற் சிலர் வேலை நடைபெறும் மில்களின் வாசலில் நின்று கொண்டு மறியல் வேலை செய்து வருகிறார்கள். முதலாளிகள் ஏப்ரல் மாதக் கூலியைக் கொடுக்க மறுத்துவிட்டதால், தொழிலாளர் தலைவர்கள் கவலை யடைந்திருக்கிறார்கள். எனவே இவர்கள் ஹோம் அங்கத்தினரிடம் விஷயங்களைத் தெரிவித்துக்கொண்டு வருகிறார்கள். இதனால் இம்மாதம் 15ந் தேதிக்குள் ஒரு முடிவுக்கு வரலா மெனத் தெரிகிறது. 12-5-29ல் கலகம் நடந்த விடங்களில் மூவர் தாக்கப்பட்டுக் காயமடைந்தனர் ஐவர்கைதியாயினர். 13-5-29ல் இங்கு அமைதியான நிலை ஏற்பட்டிருக்கிறது. எனவே அரசாங்கத்தார் பைதோனி, பெண்டி பஜார், நாக்பாடா முதலிய விடங்களில் காவலாக வைக்கப்பட்டிருந்த இராணுவப் படைகளைத் தற்போது எடுத்துவிட்டனர்.

o o o

கல்கத்தாவில் பிரியநாத பானர்ஜி என்னும் ஒரு கனவான் ஹிந்து விதவைகளின் கஷ்ட நிவாரணத்திற்காக ஒரு லட்ச ரூபா நன்கொடையாக அளித்துள்ளார்.

## "அஞ்சுவது யாதொன்று மில்லை"

### போலவரத்தில் மகாத்மாவின் சொற் பொழிவு

ஆந்திர தேசத்தில் சுற்றுப் பிரயாணஞ் செய்து கொண்டிருக்கும் காந்தியடிகள் சென்ற வாரத்தில் போல வரம் போந்தார். இந்தப் போலவரம் செல்வதற்குப் படகுகள் மூலமாக (கோதாவரி நதியைக்கடந்து) செல்ல வேண்டும் சீதா நகரத்திலிருந்து புறப்பட்ட காந்தி யடிகளும் அவர் பரிவாரத்தாரும், படகுத்துறையை நடந்து சென்றே அடைந்தனர். அங்கிருந்து, காந்தியடிகளை ஏற்றிச் செல்வதற்காகச் சில படகுகள் ஏற்பாடு செய்யப் பட்டிருந்ததாகத் தெரிகிறது. ஆனால், அப்படகுக் காரர்களைப் போலீசார் பயமுறுத்தி அவர்களை நிறுத்தி விட்டதாகக் காந்தியடிகள் தமது உபந்நியாசத்தில் சுட்டிக் காட்டினார். பிறகு ஸ்ரீ இராமசுவாமி ஐயா என்பவருடைய ஸ்டீம் படகில் அடிகளும் அவர் பரிவாரத்தாரும் போல வரம் அடைந்தனர். அங்கே, ஒரு பொதுக்கூட்டத்தில் அடிகள் நிகழ்த்திய சொற்பொழிவு, பொருள் செறிந்து கிடக்கின்ற தாதலின், அதனைக்கீழே தருகின்றோம்:—

ஒதுக்குப்புறமான இந்த மலைப் பிரதேசத்திற்கு நான் வந்ததைக் குறித்துப் பெரிதும் சந்தோஷப்படுகிறேன். சில எதிர் பாராத சம்பவங்களினால் நான் இங்கே வந்து சேர்வது மிகக் கஷ்டமாக இருந்தது. என்னை ஏற்றிவருவதாகச் சொன்ன படகுக்காரர்கள் போலீஸாரின் அச்சுறுத்தல்களினால், பிறகு மறுத்து விட்டார்கள். ஆனால் ஸ்ரீமான் சுருகுவாடா இராமசாமி ஐயா என்பவர், அந்த அச்சுறுத்தல்களைப் பொருட் படுத்தாமல், தமது ஸ்டீம் படகில் என்னை ஏற்றிக் கொண்டு வந்தார். அரசாங்கப் பிரதிநிதிகள் பல தொந்தரவுகள் விளைவிக்கலாம்; பல தடைகள் ஏற்படுத்தலாம். ஆனால் உலகத்தையெல்லாம் ஆண்டு வரும் ஆண்டவன் அத்தடைகளை நீக்கிவிடுவார். ஆண்டவன் அருள்மட்டும் நமக்கு இருந்தால், எல்லாம் நல்லனவாகவே முடியும். நாம் நீண்டகாலம் துன்புற வேண்டுமென்ற விருப்பம் அவருக்கு இல்லை. நமக்கு விரைவில் நற்காலம் இதப் பிறக்கும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. இன்றும் நீங்கள் ஒரு பாடங்கற்றுக்கொள்ள வேண்டும். எந்த மனிதனைக் கண்டும் நீங்கள் அஞ்ச வேண்டுவதில்லை. ஆண்டவனுக்குப் பயப்படுங்கள். வேறெவருக்கும் அஞ்ச வேண்டுவதில்லை. போலீஸார் என்ன செய்யக் கூடும்? அவர்களுடைய அதிகாரமெல்லாம், நமது ஸ்தூல சரீரத்தைப் பொறுத்த மட்டிலேயே செல்லும்; நமது ஆத்மாவினிடத்தில் செல்லாது. அவர்கள் தமக்குச் செய்யும் தொந்தரவுகளுக்காக நாம் பதில் செய்யக்கூடாது. இராமாயணம் உங்களுக்கு என்ன போதிக்கிறது? இராமன், இராவணனுக்கு எவ்வித துன்பமும் செய்யவில்லை இராவணனே, தன் தீச் செயலால் அழிந்தான். இப்பொழுது நமக்கு வேண்டுவது அஞ்சாமை. ஆனால் எவரிடத்தும் நீங்கள் துவேஷம் பாராட்டக்கூடாது; வன்மம் கொள்ளக்கூடாது. பரிசுத்தமான தேகம், பரிசுத்தமான ஆன்மா, பரிசுத்தமான இருதயம் இவைகள் உங்களுக்கு இருக்க வேண்டும். மதுபானம் நீங்கள் செய்யக்கூடாது. பணமுடை ஏற்பட்டிருக்கிறதென்று நீங்கள் உணர்வது உண்மையானால் இராட்டினத்தைச் சுழற்றுங்கள். ஹிந்துக்களோ, கிறிஸ்தவர்களோ, முஸல்மான்களோ யாராயிருந்தபோதிலும், நீங்கள் எல்லாரும் சகோதரர்களாக வாழவேண்டும். இதனை நீங்கள் நன்றாக ஞாபகத்திலிருத்திக் கொள்ள வேண்டும். பிறரைக் கண்டு நாம் அஞ்சுவோமானால் நாம் எதற்கும் பயனற்றவர்களாவோம். ஆண்டவன் படைப்பில் உயர்வென்றும் தாழ்வென்றும் எவ்வித வேற்றுமையுமில்லை. கடவுள் எல்லாரையும் ஒன்றாகவே படைத்தார்'

### ஆப்கன் நிலை

ஏப்ரல் மாதக்கடைசியில் அமானுல்லா படைக்கும், கில்சாய் வகுப்பினருக்கும் போர் நிகழ்ந்ததில், அமானுல்லா படை தோல்வியுற்றதாகவும், இன்னும் கில்சாய் வகுப்பினர் அமானுல்லா படைகளைத் துன்புறுத்தி வருவதாகவும், ஷின்வாரியர்களுக்குள் ஒரு பிரிவினர் அரசர் அமானுல்லா தங்களுக்குப் போதிய பணந்தந்தால், பாச்சா சாகோவுக்கு விரோதமாக யுத்தம் புரியத் தயாரா யிருப்பதாகத் தெரிவித்ததாகவும் இறுதியாகக் கிடைத்த செய்தி கூறுகிறது.

o o o

சிட்டகாங் யுவர் மகாநாட்டுத் தலைவர் ஆசிரியர் ஜோதிஷ் சந்திர கோஷ் 13-5-29 இரவு மகாநாடு நடந்து கொண்டிருக்கையிலேயே இ. பி. கோ. 124-எ பிரிவின்படி போலீஸாரால் கைது செய்யப்பட்டார்.

## போலீஸ் பரிசோதனை

### மீரத்தில் பரபரப்பு

சமீபத்தில் கைது செய்யப்பட்ட தொழிலாளர் தலைவர்கள் வழக்கு மீரத்தில் நடைபெறும் என்பதை நேயர்கள் அறிவார்கள். இவ்வூரில் இன்னும் கைதுசெய்யப்பட வேண்டியவர் சிலர் வந்திருக்கின்றனர் என்று சந்தேகங்கொண்டு, போலீஸார் இவ்வூரில் பல இடங்களையும் சோதனையிட்டு வருகின்றனர். புதிதாக வருவோர் போலீஸாரால் பரிசோதிக்கப் படுகின்றனர். 10-5-29ல் போலீஸார் ஒரு தர்மசாலையை (சத்திரத்தை) சோதனை போட்டனர். அதில் ஓர் அறைபூட்டப் பட்டிருந்தது. இதைப்பற்றிச் சந்தேகங் கொண்டு மேற்படி அறையைத் திறந்து பார்த்தனர். அதில் ஓர் அட்டைப் பெட்டியில் இரண்டு வெடிகுண்டுகளும் சில ஈயக்குண்டுகளும் கிடைத்தன. இந்த அபாயகரமான வெடி குண்டுகள் உயிர்ச்சேதம் உண்டுபண்ணவே கொணரப்பட்டிருப்பதாகப் போலீஸாருக்கு முன்னரே செய்தி கிடைத்திருக்கிறது. இதைக் குறித்துப்போலீஸார் பக்கத்தறைகளி லிருந்தவர்களைப் புலன் விசாரித்ததில், யாரோ ஒரு வெளியூர் வாசி மூன்று, நான்கு நண்பர்களுடன் தங்கியிருக்கிறா ரென்று கூறினார்கள். மீரத் ஜில்லா, கிர்தாவில் ஒரு பெரிய கிலச்சுவான் தாரான சேத்ராம் கோபால், மீரத் மில் சொந்தக்காரரான ஜெயதேவசிங், டில்லி வாசனைத் திரவிய வியாபாரியான உத்தம சந்த், மோதிலால் இவர்கள் சோதனை நடந்து கொண்டிருக்குஞ் சமயம் தர்மசாலைக்குப் போந்தனர். உடனே அவர்கள்மீது சந்தேகங்கொண்டு பல கேள்விகள் கேட்கப்பட்டன. பின்னர், ராமகோபாலரும், ஜெயதேவசிங்கும் கைது செய்யப்பட்டனர். ஏனைய இருவரும் சிறிது போழ்தவரை காவலில் வைக்கப்பட்டுப் பின்னர் விடுதலை செய்யப்பட்டனர்.

கைதுசெய்யப்பட்ட ராமகோபால், ஜெயதேவசிங் இவர்களுடன் சுரேஷ்சந்திரர் என்பாரும் கைது செய்யப்பட்டதாக மற்றொரு செய்திகூறுகிறது. இவர்கள் மூவரும் மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் விசாரணைக்கு நிறுத்தப் பட்டனர். மாஜிஸ்திரேட், இவர்கள் மூவரும் 18-5-29வரை போலீஸார் பாதுகாவலில் இருக்கவேண்டுமென உத்திர விட்டார். 11-5-29 காலை திரு. பிஷம்பர் சகாய் என்னும் ஹாங்கிரஸ் ஊழியர் வீட்டைப் போலீஸார் சோதனையிட்டு, அவரையும் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்றனர். கலாசாலை மாணவரும், "ஹிதவாதி" என்னும் ஹிந்தி பத்திரிகையின் நிருபருமான ஒருவர் கைது செய்யப்பட்டார்.

10-5-29 சிப்பாய் கலக தினமாகையால் அமைதி காக்க அன்று மீரத்திலுள்ள எல்லா அரசாங்கக் கட்டிடங்களும், உத்தியோகஸ்தர்களின் பங்களாக்களும் போலீஸாரால் காவல் புரியப்பட்டன. கூரெங்கும் பரபரப்பு குடிகொண்டிருக்கிறது.

### ராஜா சர். அண்ணாமலை சங்கீத கலாசாலை

சிதம்பரம், அண்ணாமலை சர்வகலாசாலையின் சார்பில் அண்ணாமலை சங்கீதக்கல்லூரி ஒன்று ஸ்தாபிக்கப்பெற்று, அதன்திறப்பு விழா 11-5-29ல் சிறப்பாக நடந்தேறியது. சங்கீத நிபுணர்களை உண்டாக்குவதும், சங்கீத சாத்திரத்தை உன்னத நிலையில் வைப்பதுமே இக்கலாசாலையின் நோக்கம். ஆண்டுதோறும் இக்கலாசாலைக்கு 17 ஆயிரம் ரூபா செலவழிக்கப்படும். அரசாங்கத்தாரும் திரு. அண்ணாமலை செட்டியாரும் இச்செலவைப் பகிர்ந்து கொள்வார்கள். இதில் மூன்று விதமாகப் பயிற்சி அளிக்கப்படும். முதல் இரண்டாண்டுகள்வரை சங்கீதத்தில் திறமை பெற ஒரு பயிற்சியும், பட்டம்பெற இரண்டாண்டுவரை ஒரு பயிற்சியும் பின்னர் விசேட நிபுணத்துவம் பெற மற்றொரு பயிற்சியும் உண்டாகும். இறுதியாகக் கூறப்பட்ட பயிற்சி தற்போது அளிக்கப்படமாட்டாது. முதலாண்டு பயிற்சிதான் இப்பொழுது ஆரம்பிக்கப்படும். இப்பயிற்சிக்குப் பத்து மாணவர்களே சேர்த்துக் கொள்ளப் படுவார்கள். இவர்களுக்குக் குருகுல முறையில் சங்கீதம் கற்றுக்கொடுக்கப்படும். சங்கீதம் கற்றுக்கொள்வதற்குக் கட்டணம் ஒன்றுமில்லை. இக்கலாசாலையில் இடம். போஜனம் முதலிய வசதிகளுக்குப் பணம் கொடுக்கமுடியாத நிலையிலிருப்பவர்களுக்கு மட்டும் இலவச சம்பளம் கொடுக்கமுடியும்.

o o o

திருவதிகையில் திருநாவுக்கரசு சுவாமிகள் திருவிழா 5-4-29 முதல் 5-5-29 வரையில் மிக்க சிறப்புடன் நடைபெற்றது. அறிஞர் பலர் அரிய சொற்பொழிவுகள் நிகழ்த்தினர் என்று ஒருநிருபர் தெரிவிக்கிறார்.

ஞூரிய கிரகணத்தன்று, பெஜவாடாவில் கிருஷ்ணா நதியில் ஸ்நானம் செய்து கொண்டிருந்த மூவர் மூழ்கி மரண மடைந்தார்கள்.

o o o

டாக்டர் ரவீந்திரநாத் தாகூர் அவர்களின் 69-வது ஆண்டு பிறந்த தினக் கொண்டாட்டம் ...த்தாவில் 8-5-29ல் நடை பெற்றது.

o o o

பாரிஸில் திடீரென மரணமடைந்த லார்ட் ரெவெல்ஸ்ட்ரோக் என்பார் 100,000 பவுனை எட்வர்ட் மன்னர் நிதிக்காக வைத்திருக்கிறார்.

o o o

லார்ட் கோஷனுக்குப் பதில் ஆக்டிங் கவர்னராக வேலைபார்க்கப்போகும் ஸர் மார்ஷ் பாங்ஸ் 27-6-29-ல் தமது வேலையை ஏற்றுக் கொள்வார்.

o o o

பிரம்மஞானக் கொள்கைகளைப் பரவச் செய்வதற்காகத் "தியாசபிக் கம்பெனி லிமிடெட்" என்று ஒரு கம்பெனி லண்டனில் திறவப் பட்டிருக்கிறது.

o o o

9-5-29 இரவு கோயமுத்தூர், சென்டிரல் ஜெயிலுக்கு அருகாமையிலுள்ள முனியப்பன் கோயில் தீப்பிடித்துக் கொண்டு சாம்பராக எரிந்து போயிற்று.

o o o

ஆக்ராவிலுள்ள தாம்ஸன் ஆஸ்பத்திரிக்கு ஆக்ரா செயின்ட் ஜான் கல்லூரியின் தலைமை ஆசிரியர் ஸ்ரீ டேவிஸ் இங்கிலாந்து சென்றதை முன்னிட்டு, 3,000 பவுன் நன்கொடையளித்துள்ளார்.

o o o

கும்பகோணம் அரசாங்கக் கலாசாலைத் தலைவராக விருந்த ஆசிரியர் எஸ். ஈ. அரங்கநாதன் அவர்கள் சிதம்பரம் அண்ணாமலை சர்வ கலாசாலையின் உப அத்தியட்சகராக நியமிக்கப் பட்டிருக்கிறார்.

o o o

1857-ம் ஆண்டுக் கலகத்தின் ஞாபகார்த்தமாக விவசாயிகள், தொழிலாளர்கள் இவர்களுக்குள் ஓர் ஒற்றுமையை உண்டு பண்ணக் "காதர்" பத்திரிகை 10-5-29 லிருந்து அமிருத சரஸிலிருந்து வெளிவருகிறது.

o o o

தென்திருவிதாங்கூர் கோட்டாறு செளராஷ்டிர சபையின் ஆதரவில் இலவச இராப்பாடசாலையும் இளைஞர் பயிற்சிக் கழகமும் ஏற்படுத்தி 28-4-29ல் தொடங்கி நடத்தப்பட்டு வருகிறதென்று நமக்கு அறிவிக்கப்படுகிறது.

o o o

உடுப்பி அடமார் சுவாமியார் அவர்கள் 11-5-29ல் விண்ணுலகடைந்தார். இச் செய்தி பரவியதும் உடுப்பியிலுள்ள வியாபாரிகள் அன்று முழுவதும் கடைகளை மூடி விட்டனர். அன்று மாலை ஓர் அநுதாபக் கூட்டமும் நடந்தது.

o o o

சென்னை, கிறிஸ்துவக் கலாசாலையை தாம்பரம் என்னு மிடத்துக்கு மாற்ற உத்தேசித்திருக்கிறதென்றும், அதன் பொருட்டு அரசாங்கத்தார் பதினறு லட்சம் ரூபா கொடுக்கப் போகிறார்களென்றும் ஒரு செய்தி கூறுகிறது.

o o o

சென்னையில் 35 வயதுள்ள தாயாரம்மாள் என்பவள் தமது மகன் வெள்ளிக் கிண்ணம் திருடிய வழக்கில் சம்பந்தப்பட்டிருந்ததால், இவ்வழக்கினால் மகனுக்கு என்ன நேருமோ என்று மனநொந்து, 10-5-29 காலை தூக்கிட்டுக்கொண்டு மரணமடைந்தாள்.

o o o

சென்னை, போலீஸ் டெபுடி கமிஷனர் ஜனப் மகமது ஜொடீனுக்கும், மகாராஷ்டிர பிராமண வகுப்பைச்சார்ந்த ஸ்ரீமதி. ஆர். லட்சுமி தேவி. (பி. ஏ.)க்கும் புதுச் சேரியில் 11-5-29ல் திருமணம் நடந்தேறியதென ஒருபத்திரிகை நிருபர் எழுதுகிறார்.

o o o

ஸ்பென்வாலி தேர்தல் தொகுதியில் சர் ஜான் சைமனுக்கு போட்டி அபேட்சகராக நிற்கும்படி லண்டன் பொதுவுடமைக் கட்சியார் எழுதியிருந்ததை, மீரத் சதியாலோசனை வழக்குச் சம்பந்தமாகக் கைதி செய்யப் பட்டுள்ள திரு. ஷவுக்கத் உஸ்மானி ஒப்புக் கொண்டார்.

o o o

சத்வித்யா பயிற்சியாளர் சங்கத்தின் முதலாவதாண்டுவிழா கோயமுத்தூர் ஜில்லா அவினாசி தாலுக்கா சொக்கம்பாளையம் என்னுங் கிராமத்தில், 22, 23-4-29ந்தேதிகளில் உதகமண்டலம் ஸ்ரீராம கிருஷ்ண ஆசிரமத் தலைவர் சுவாமி சித்பவானந்தர் தலைமையின் கீழ் சிறப்புடன் நடை பெற்றது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

o o o

துறையூரில் திருஞான சம்பந்தர் திருநாளாகிய சுக்கில ஹு வைகாசி மீ 12௨ சனிக்கிழமையன்றும், மறுநாள் ஞாயிற்றுக் கிழமையன்றும், மகிபாலன் பட்டி இருமொழிப்புலவர், உயர் திருவாளர் மு. கதிரேசன் செட்டியார் அவர்களது சீரிய தலைமையில் நடை பெறும் என்று திரு. டி. எம். பாலசுந்தரம் அறிவிக்கிறார்

o o o

கஞ்சம் ஜில்லாவிலுள்ள ஜுலுமூர் என்னுங் கிராமத்தில் ஆசிரியர் சிகலா அர்க்கய்ய நாயுடு என்பார் 20அடி உயரமும் 6அடி சுற்றளவு முள்ள பலூனமொன்றை ஒரு கயிற்றின் உதவியினால் பூமியினின்றும்பெயர்த்து விட்டார் இதன் பொருட்டு அவருக்கு அவ்வூர் வாசிகளால் ரூ100 பெறுமான ஒரு தங்கப்பதக்கம் அளிக்கப்பட்டது.

## கலம்பகம்

o o o

திரிச்சிராப்பள்ளி ரயில்வே சதியாலோசனை வழக்கின் சம்பந்தமாக அண்மையில் 10 ஆண்டு கடுங்காவல் தண்டனை யடைந்துள்ள 15 தொழிலாளர் தலைவர்களுக்கும் சிறைச்சாலை கைதிகள் அணியும் உடைகள் கொடுக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது: ஹைகோர்ட்டில் விரைவில் அப்பீல் செய்யப்படும் என்று தெரிகிறது.

o o o

இராமநாதபுரம் ஜில்லாவைச் சேர்ந்த சாயல்குடி கிராமத்தில் அக்கிராம வாசிகளின் அரும் பிரயாசத்தால் "செந்தமிழ் கலாநிதி விருத்திசங்கம்" என்ற நாமதேயத்துடன் ராஜாங்கமுறையிலும், உலகப்பொது காரியங்களிலும் விருத்தியடையும் நோக்கத்தைக் கொண்டு ஒரு சங்கம் 1-5-29-ல் திறக்கப்பட்டது என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

o o o

இந்தியா முழுவதிலும் மதுவிலக்குப் பிரசாரம் புரிய ஆங்காங்குக் கிளைச்சங்கங்களை அமைக்க வேண்டுமென, லண்டனிலுள்ள அகில உலக மதுவிலக்குச் சங்கத்தின் தலைமை இடத்திலிருந்து ஓர் அறிக்கை வெளிவந்திருக்கிறது. அவ்வறிக்கையில், இந்தியாவிலுள்ள காங்கிரஸ் தலைவர்களெல்லாம் மதுவிலக்கையே தங்கள் முதல் திட்டமாகக் கொள்ளல் வேண்டுமென்று குறிப்பிடப்பட்டுள்ளது.

o o o

சேலம் ஜில்லா, காவேரியின் ஆதிதிராவிட வகுப்பைச் சேர்ந்த வெள்ளையனும் அவருடைய மனைவியாரும் பல்லாண்டுகளுக்கு முன்னர் கிறிஸ்துவ மதத்தில் சேர்ந்து கொண்டனர். இவ்விருவரும் தம் குடும்பத்துடன் மீண்டும் ஹிந்துமதம் புகவிழைந்தனர். எனவே, சிதம்பரம் சுவாமி சகஜானந்தரால் சுத்திசடங்கு செய்யப் பெற்றபின்னர், அவர்கள் ஹிந்து மதத்தில் சேர்த்துக் கொள்ளப் பட்டார்கள் என்று ஒரு பத்திரிகைச்செய்தி கூறுகிறது.

o o o

திரு. டிவேலரா, அயர்லாந்து பார்லிமெண்டில் தலைவர் ஒருதலைச்சார்பாய் நடக்கிறார் என்று கண்டித்துப் பேசினர். அப்படிப்பேசியதை வாபீஸ்வாங்கிக் கொள்ளவும் அவர் மறுத்துவிட்டார். எனவே அரசாங்கக் கட்சித்தலைவர், திரு. காஸ்கிரேவ், டிவேலராவைப் பார்லிமெண்டி னின்று நீக்கிவைக்கும்படி ஒரு தீர்மானங் கொண்டு வந்தார். அத்தீர்மானம் நிறைவேறியது. உடனே திரு. டிவேலரா சபையை விட்டு வெளியேறி விட்டார்.

o o o

இந்தியாவிலுள்ள உருது எழுத்துக்களை ரோமன் எழுத்துக்களாக மாற்றுவது அநுகூலமாக இருக்குமா என்பதைக் குறித்து அவரவர்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க வேண்டு மென்று இந்தியா அரசாங்கத்தார் மற்ற மாகாண அரசாங்கத்தாருக்கு எழுதியிருப்பதாகத் தெரிகிறது. உருது எழுத்துக்களுக்குப் பதிலாக ரோமன் எழுத்துக்களை உபயோகப்படுத்துவதினால் மிகவும் செளகரியம் உண்டாகும் என்பது இந்திய அரசாங்கத்தாரின் எண்ணம்.

o o o

சென்ற வாண்டு 16-12-28ல் கொண்டாடப்பெற்ற காகோரி தினத்தன்று லாகூரில் இராஜாங்கத் துவேஷமான சொற்பொழிவு நிகழ்த்தியதாக திரு. ஆமதின் மீது குற்றஞ் சாட்டப்பட்டு நடைபெற்ற வழக்கில், அடிஷனல் ஜில்லா மாஜிஸ்திரேட் அவருக்கு இரண்டாண்டு கடுங்காவல் தண்டனையும், ரூ 500 அபராதமும் விதித்தார். அதைக் குறித்து அப்பீல் செய்ததில் 10-5-29 ல், நீதிபதி அப்பீலைத் தள்ளி விட்டார். ஆனால் எதிரி வழக்கு நடை பெற்றுத் தீர்ப்புக் கூறும் வரை சிறையிலிருந்த மூன்று மாதக் காலத்தை நீக்கி விட்டதால், தண்டனை ஓராண்டு ஒன்பது மாதக்காலத்திற்குக் குறைக்கப்பட்டது.

o o o

1929ஹு மேமீ 15,16-ந்தேதிகளில்தென் ஆற்காடு ஜில்லாவைச் சேர்ந்த திண்டிவனம் ரெயில்வே ஸ்டேஷனுக்குக்கிழக்கில், நாகலாபுரம், மரக்காணம் ரோட்டிலுள்ள அமெரிக்கன் ஆர்காட்மிஷன் கட்டிடத்தில்,சென்னை மாகாண ஆரம்பாசிரியர் 7-வது மகாநாடு நடைபெறும். சென்னைப் பிரம்பூர் சி. ஸி. ஸி. ஹைஸ்கூல் தலைமை உபாத்தியாயர் திருவாளர் எம். கே. சுந்தரவரதாச்சாரியார் அவர்கள் பி. ஏ. எல். டி. தலைமை வகிப்பார். சென்னை அரசாங்க மந்திரி கனம் எஸ். முத்தையா முதலியார் அவர்கள் கொடியைப் பறக்கவிடுவார். சென்னை அரசாங்க மந்திரி கனம் எம். ஆர். சேதுரத்தினம் ஐயர் அவர்கள் மகாநாட்டைத் திறந்து வைப்பார் என்று நமக்கு அறிவிக்கப்படுகிறது.

o o o

வழக்கம்போல இவ்வருடமும் சித்திரை மாதம 26௨ காலை பழைய வண்டி பாளையம் பாலபக்தஜன சபையில் ஸ்ரீ சிறுத்தொண்டர் குருபூசை செவ்வனே நடைபெற்றது. மாலை 4-மணிக்கு, திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீமத் ஞானியார் சுவாமிகளை ஆடம்பரத்துடன் ஊர்வலமாக வரவேற்றார்கள். சுவாமிகள் சபைக்கு எழுந்தருளிய பிறகு தேவாரம் ஓதினார்கள். வரவேற்புப் பத்திரம் வாசித்தார்கள். சுவாமிகள் சிறுத்தொண்டர் சரித்தினின்றும் மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரும் இன்றியமையாது நடக்கவேண்டிய நீதிமொழிகளை எளிய நடையில் உபதேசித்தார்கள். பின் வந்தனோபசாரம் முடிந்தபிறகு சந்தன தாம்பூலாதிகள் வழங்கப்பெற்றுச் சபை 10-மணிக்கு இனிது நிறைவேறியது என்று மேற்படி சபையார் அறிவிக்கின்றனர்.

o o o

சென்ற வாரம் உதக மண்டலத்தில் மதுவிலக்கு மகா நாட்டின் விஷயாலோசனைக் கூட்டம் கூடிற்று. அது போது மதுவிலக்குப் பிரசாரத்தின்பொருட்டுச் சென்னை அரசாங்கத்தாரால் அநுமதிக்கப்பட்ட 4-லட்ச ரூபாவைச் செலவழிப்பதைக் குறித்துப் பேசப்பட்டன. மதுவிலக்குப் போர்டின் நிருவாகக் கமிட்டி அங்கத்தினர்களாக கலால் இலாகா மந்திரியர், சுகாதார உத்தியோகஸ்தர், அரசங்கத்து டெப்டி காரியதரிசி, ஸ்ரீமான்கள், கே. ஆர். வேங்கடராமண ஐயர், பி. முனிசாமி நாயுடு, ஸி. கோபால மேனன், ஜே. ஏ. டேவிஸ், வி. ஸி. வெள்ளியங்கிரி கவுண்டர், அப்துல் ரஸாக் சாயபு, ஆர். ஸ்ரீநிவாசன், எம். இராமச்சந்திர ராவ், ஈ. வே. இராமசாமி நாயகர் ஆர். சூரிய நாராயண ராவ் இவர்கள் நியமிக்கப்படுவார்கள்.

o o o

நேரு அறிக்கைக்கு ஆதரவளிப்பதை விட்டு விடும்படியும் இல்லாவிடின் உயிருக்கே ஆபத்து விளையுமென்று பயமுறுத்தியும் எழுதப்பட்ட ஒருகடிதம், மௌலானா ஜாபர் அலிக்குக் கிடைத்தது. 9-5-29 தேதியிட்ட அக்கடிதம் டில்லி முஸ்லீம் முகாமிலிருந்து "யங் முஸ்லீம் சங்கத்தின் தலைவர் ஆணையின்படி எழுதப் பட்டது. அதில், "மௌலானா ஜாபர் அலி இருமாதத்துக்குள் அவருடைய கொள்கையை மாற்ற வேண்டும்; அல்லது மரணத்திற்குத் தயாராயிருத்தல் வேண்டும். இச்சங்கத்தின் கொள்கை பூரண சுயேச்சையே" என்று குறிப்பிட் டிருந்தது. இதைக்கண்ட மௌலானா, "உண்மையின் பொருட்டும் தாய் நாட்டின் பொருட்டும் நான் மரணத்திற்குங் கூட நல்வரவு கூறுகிறேன்" என்று புகன்றார்.

o o o

சென்னை, பிரதம நீதிபதி மாணம்:— சென்னை, ஹைகோர்ட் பிரதம நீதிபதியான சர். வி. எம். கூட்ஸ் டிராட்டர் 12-5-29 ல், "மனேலா" என்னும் கப்பலில் இங்கிலாந்துக்குப் போகும் வழியில் மரணமடைந்தார். அவர் தேக அசௌக்கியத்தை முன்னிட்டே இங்கிலாந்துக்குச் சென்றார்.

o o o

ஆணுக நடித்த மற்றொரு மாது:—ஆண் பிள்ளைபோலவே சில ஆண்டுகளாக நடித்து வந்த மற்றொரு பெண்ணின் இரகசியம் புலனுகி விட்டது. இவ்வாண்டு லண்டன் வைத்தியசாலை ஒன்றில் வில்லியம் ஹில்டன் என்பார் ஒருவர் சிகிச்சைக்கு வந்தார். பின்னர் இவர் மாதெனக் கண்டுபிடிக்கப்பட்டார். ஹில்டனின் சரிதமும், பார்க்கரின் சரிதமும் ஏறக்குறைய ஒத்திருக்கிறது. ஹில்டனும் சில காலமாக ஒரு மாதுக்குக் கணவனாக இருந்திருக்கிறார். இவர் மரத் தொழிலில் அமர்ந்து ஜீவனம் செய்து வந்தார்.

o o o

லண்டனிலும் சைமனுக்குப் போலீஸ் காவல்:—லண்டனில் சர்ஜான் சைமன் அரசியல் சம்பந்தமாக வேலை செய்கிற போதெல்லாம், அவருடன் பாது காப்புக்காகப் போலீஸ் இருந்து கொண்டே யிருக்கிறது. அவர் எப்போதும் பிரத்தியேகப் போலீஸ் உத்தியோகஸ்தருடன் பிரயாணஞ் செய்கிறார். லிவர்பூல் என்னு மிடத்தில் கூடிய ஒரு கூட்டத்தில் சர்ஜான் சைமன் விஜயஞ்செய்திருந்தார். அதுபோழ்து, ஸ்ரீயங் என்னும் பொது உடமைக் கட்சிக்காரர், சர்ஜான் சைமனை வசை மொழிகளால் அலங்கரித்தது மன்றி, அவர் ஒரு கொலைக் காரரென்று தூற்றி 'டைப்' அடிக்கப்பட்ட நூற்றுக் கணக்கான பிரசுரங்களையும் கூட்டத்தின் மத்தியில் வீசி எறிந்தார்.

வனமலர்ச் சங்கம்:— இச்சங்கத்தின் நான்காவது ஆண்டு விழா 27, 28—4—29 தேதிகளில் கொடுமுடி ஸ்ரீ சங்கர வித்தியா சாலையில் திரு. வ. அழகப்பன், பி. ஏ, பி. எல்., அவர்கள் தலைமையின்கீழ் இனிது நடந்தேறியது. 27௨ காலை 9-மணிக்கு அன்பர் ல. கி. முத்துசாமி அவர்களால் தேசியக் கொடியேற்றுவிழா இனிது நடைத்தப் பட்டது. வரவேற்புக் கழகத்தலைவர் திரு. க. பெரியசாமி அவர்கள் வனமலர்க்கிளை அன்பர்களை வரவேற்றுப் பேசினார்கள். பின்னர், தேசாபிமானிகள் லாலாலஜபதிராய், பனகால் அரசர், திருக்கோவலூர் குமாரசாமியார் இவர்கள் காலஞ் சென்றதைக் குறித்து அநுதாபம் காட்டப்பட்டது. பல முக்கிய தீர்மானங்கள் நிறைவேறிய பின் மாலை 4-30-க்கு தேச வாழ்த்துடன் இனிது முடிந்தது என்று சங்கத்தின் பொதுநிலைக் கழகக் காரியதரிசி தெரிவிக்கிறார்.

o o o

முத்துராஜ மஹாஜன சங்கம்:—இச்சங்கத்தின் ஆதரவின்கீழ் 3-வது மஹாநாடு செங்கற்பட்டு ஜில்லா விஷ்ணு காஞ்சி திருக்கச்சி நம்பி சன்னதி வீதி முத்துராஜ வம்ஸ பாளையக்கார மண்டபத்தில் நிகழும் சுக்கிலஹு வைகாசிமீ 10௨ (23-5-29) வியாழக்கிழமை ஸ்ரீ வரதராஜஸ்வாமி கருடோற்சவ தினத்தன்று காலை 7-மணிமுதல் 11-மணிவரை விஷயாலோசனைக் கூட்டம் நடைபெறும். 11-மணிமுதல் 1-மணிவரையில் ஷை மண்டபத்திற் கெதிரில் பாகால பக்த ஜன சபையில் முத்துராஜ மஹா ஜனங்களுக்கு போஜனமும், பகல் 2-மணி முதல் மாலை 6-மணிவரையில் காஞ்சீபுரம் ஆடிஸன் பேட்டை மூங்கில்மண்டபம் சமீபம் பச்சையப்பன் ஹைஸ்கூலில் மஹாநாடும் நடத்தப்படும். முத்துராஜ மஹா ஜனங்கள் ஒவ்வொருவரும் தவறாமல் விஜயஞ் செய்து ஷை மஹாநாட்டைச் சிறப்பிக்கப் பிரார்த்திக்கிறோம் என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

o o o

களவை அறிய விநோத வழி:—விழுப்புரத்தைச் சார்ந்த உடையாநத்தம் வெள்ளையாராவுத்தரும் மற்றொருவரும், தங்கள் கடையில் ரூ. 30 களவு போனதின் சம்பந்தமாக, மேற்படியூர் வாசியான பச்சையம்மாள் முதலிய அறுவர்மீது ஐயுற்றனர். எனவே அவர்கள் களவைக் கண்டுபிடிக்க ஒரு விநோதக் காரியத்தைச் செய்தனர். அதாவது கொதித்துக் கொண்டிருக்கும் எண்ணெயில் ஓர் அணவைப் போட்டு விட்டு, அதை எடுக்குமாறு பச்சையம்மாள் முதலிய அறுவரும், வெள்ளைய ராவுத்தராலும், மற்றொருவராலும் வற்புறுத்தப்பட்டனர். கையை விடும்போது, சுடு உண்டானல் குற்றவாளியென்றும், சுடு உண்டாகாமலிருந்தால் குற்றவாளி யல்லவென்றுங் கூறப்பட்டதாம். எனவே, அந்த ஆறு பேர்களும் கொதிக்கின்ற எண்ணெயில் கை விட்டதால், அவர்களுடைய கை வெந்து போய்விட்டது. இவ்விஷயத்தை அறிந்த போலீசார் வெள்ளையா ராவுத்தரையும் மற்றொருவரையும் இ. பி. கோ. 300-வது பிரிவுப்படி குற்றஞ் சாட்டிக் கைது செய்தனர். வழக்கு விசாரணை 16-5-29ல் நடைபெறும்.

### மதுவிலக்கும் ஸ்ரீமான் ஹென்ரி போர்டும்

போர்ட் மோடார் வண்டிகளை உற்பத்தி செய்யும் ஸ்ரீமான் ஹென்ரி போர்ட் - இவர் உலகத்திற்குள் மிகச் சிறந்த பணக்காரர். அமெரிக்காவில் மதுவிலக்குச் சட்டம் எப்படி அமுலில் இருந்து வருகிறது என்பதைப்பற்றிப் பின் வருமாறு அபிப்பிராயங் கூறுகிறார்:—

மது விலக்கைப்பற்றி எவ்வித தவறும் நேர்ந்துவிட வில்லை. நாடு இப்பொழுது சுத்த மடைந்து வருகிறது. மாறுன பல செய்திகள் பல வெளிவந்த போதிலும், தேசத்தில் மதுவிலக்குப் பூரணமான வெற்றியை யடையும் நிலையிலிருக்கிறது: மதுவிலக்குச் சட்டம் அமுலில் இருந்து கொண்டு வருகிறது. சாராயத்தை உபயோகிப்பது தீமை பயப்பதென்பதை இப்பொழுது எல்லாத் தேசத்தவரும் உணர்ந்து வருகின்றனர்.





## சைவர் மகாநாடு

### திருப்பாதிரிப்புலியூரில் நடை பெறும்

இம்மகாநாடு சைவசித்தாந்த மகா சமாஜம் முதலிய பல சைவ சபைகளின் சார்பில் திருப்பாதிரிப்புலியூர் சந்நிதி வீதியிலுள்ள ஸ்ரீ பாடலேசுவரர் தருமபாடசாலையில் புதிதாக அமைத்துள்ள "சிவஞானப் பந்தரில்" நிகழும் சுக்கிலஹு வைகாசிமீ 3௨ வியாழக்கிழமை (16-5-29) முதல் ஐந்து நாட்கள் வரை நடைபெறும். ஸ்ரீலஸ்ரீ - சுவாமி வேதாசலம் என வழங்கும் உயர்திரு - மறைமலையடிகள் தலைமை வகிப்பார்கள்.

முதல் நாள் வியாழக்கிழமை (16-5-1929) மாலை 6 மணிமுதல் 7½ மணிவரை ஸ்ரீ பாடலேசுவரர் திருக்கோயில் வழிபாடும், சைவ சித்தாந்த மகா சமாஜ அங்கத்தினர் பொதுக் கூட்டமும் நிகழும்.

இரண்டாம் நாள் வெள்ளிக் கிழமை (17-5-1929) காலை 7½ மணிமுதல் 10½ மணி வரை தேவாரம், கடவுள் வணக்கம், தலைவர் நியமனம், வரவேற்பு, தலைவர் பேருரை முதலியன நடைபெறும்.

3,4,5-ம் நாட்களாகிய சனி ஞாயிறு திங்களில் (18,19,20-5-29) காலை 7-30 மணி முதல் 11 மணிவரை முறையே திருநெல்வேலியில் நடந்த சைவப் பெரியார் தனிக் கூட்டத்தின் (1-5) தீர்மானங்களும் (6-12) தீர்மானங்களும் (13-20) தீர்மானங்களும் அவைகள்பற்றிய திருத்த தீர்மானங்களும் ஆலோசிக்கப்பட்டு நிறைவேற்றப்படும்.

திங்கள் மாலை 4—4-30 மணிக்கு "அறுபத்துமூன்று நாயன்மார்கள் சரித்திர உண்மை" என்பதுபற்றிய கட்டுரை வரைந்தார்க்குப் பரிசளிப்பும், சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் அங்கத்தினர் பொதுக்கூட்டமும் நடைபெறும்.

வெள்ளிக்கிழமை முதல் ஒவ்வொரு நாள் மாலை வேளைகளில் முறையே திருவாளர்கள் கி. குப்புச்சாமி முதலியார், ச. சச்சிதானந்தம் பிள்ளை, திரு. வி. கலியாணசுந்தர முதலியார், கா. சுப்பிரமணியம் பிள்ளை, மா. வே. நெல்லையப்ப பிள்ளை, இளவழகனர், ந. மு. வேங்கடசாமி நாட்டார், கெ. ஆறுமுகம் பிள்ளை, காருடை - சூரிய மூர்த்தியா பிள்ளை, சிவானந்த சிவாசாரிய சுவாமிகள், குளித்தலை - அரங்கசாமி ஐயர், கா. ஜரவேல் முதலியார், பா. கந்த சாமிப்பிள்ளை, அ. மு. சரவண முதலியார், அ. வரதநஞ்சைய பிள்ளை, இ. மு. சுப்பிரமணிய பிள்ளை, நாகை. திருநாவுக்கரசு, ந. சிவகுருநாதம் பிள்ளை, பு. சி. புன்னைவனநாத முதலியார், திரு. வி. உலகநாத முதலியார், பா. ரா. பரமசிவ முதலியார், பொ. சொக்கலிங்கனர், ச. முத்துக் குமாரசாமிப் பிள்ளை, ரா. பதுமநாபப் பிள்ளை முதலியவர்கள் அரிய பொருள்கள்பற்றி விரிவுரை நிகழ்த்துவார்கள்.

### தேன் தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டி

(காரியதரிசியிடமிருந்து)

மேற்படி கமிட்டியின் காரியக் கமிட்டிக் கூட்டம் சென்ற 6-5-29௳ மன்னர் குடியில் குன்னியூர் அய்யாவர்கள் ஜாகையில் ஸ்ரீமான் ப. சா. வேங்கட கிருஷ்ண பிள்ளைஅவர்கள் தலைமையில் கூடியது கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக அங்கீகரிக்கப்பட்டன.

(1) பாஞ்சால சிங்கமும் சிறந்த தேசத் தலைவருமாகிய ஸ்ரீஜத் லாலா லஜபதிராய் அவர்களின் அகால மரணத்திற்கு வருந்தி இக்கமிட்டி தனது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்வதுடன் அன்னரின் மரணத்தைத் துரிதப்படுத்த காரணமாயிருந்த லாகூர் போலீசாரின் அக்கிரம நடத்தையைக் கண்டிப்பதுடன் லாலாஜியின் அடிச்சுவட்டைப் பின்பற்றித் தமிழ்மக்கள் நடக்க வேணுமாய்க் கேட்டுக் கொள்கிறது.

(2) உப காரியதரிசி ஸ்ரீமான் சுப்பய்யர் தேவர் அவர்கள் ஜில்லா கமிட்டித் தோதலை ஆட்சேபித்தெழுதிய கடிதம் படிக்கப்பட்டு பதிவு செய்யப்பட்டது.

(3) (a) சென்ற ஆண்டு கல்கத்தாவில் நடைபெற்ற அகில இந்திய தேசிய மகாநாட்டில் இந்தியாவில் தேசிய நோக்கம் பரிபூரண விடுதலையை ஆதாரமாகக் கொண்டு தீர்மானிக்கப்பட்டிருக்கிற நேரு கமிட்டி அறிக்கை சம்பந்தமான எல்லாத் தீர்மானங்களையும் இக்கமிட்டியார் பூரணமாய் அங்கீகரிக்கிறார்கள்.

(b) ஆதி சம்பந்தமாய் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியார் தீர்மானித்திருக்கிற திட்டங்களை நிறைவேற்றி வைக்கும்படி தாலூகா கிராம சபைகளைக் கேட்டுக்கொள்ளுகிறது.

## பெண்ணினம்

### சைவம் வளர்த்த நற்றவ மங்கை

(திரு. செ. சின்னத்தம்பி எழுதியது)

பழந் தமிழ் மக்களால் உயர் நெறியெனப் பெரிதும் பரிந்தோம்பப் பெற்றது சைவ சமய மொன்றே யாகும். சைவம் தோன்றிய காலம் இதுவரை எவராலும் வரையறுக்க முடியாமலிருக்கின்றது. உலகத்தில் இந்நாள் உலவும் நெறிகளுள் மிகவும் தொன்மை வாய்ந்து ஒளி நிறைந்த பெருநெறியாய் நிலவுவது நம் ஒப்பற்ற திரு நெறியாகிய சிவநெறியேயாகும். அதன் மாண்பிற்கு நிகராக வேறெந்த நெறியிலும் சிறப்புக் காண்டல் இயலா தென்று ஒரு சிறிதேனும் தயங்காது சொல்லலாம். தமிழ் மக்கள் தம் தனிநாகரிகத்தின் பெருவிளைவாய் அறிவாராய்ச்சிகளின் சிறந்த முடிபாய் - அன்புப் பெருக்கின் இன்ப ஊற்றாய்ச் சைவப் பெருநெறியானது விளங்குகின்றது. மூவேந்தர்களும், முனிவர்களும், புலவர் பெருமக்களும் இவ்வொளி நெறியை மிகவும் உவந்தோம்பி வந்தனர். திருமூலர் - மணிவாசகர் போன்ற அந்தணர் செல்வங்களால் - செந்தமிழ் வாணர்களால் - இவ்வழகலர் நெறியானது வளர்க்கப்பட்டது. தமிழகம் முழுவதும் சைவ வானொளியிற் றோய்ந்து மிளிர்ந்து கிடந்தது. இமயமுதல் குமரியீறுகச் சைவ ஒளி; யாண்டும் இன்பப் பெருக்கு; யாண்டும் அன்பு நெறி; எங்கும் உண்மை இன்பத் திருக்கூத்து. இவ்வாறு நெடுங்கால மாகத் தண்டமிழ் நாட்டிற் சைவம் தனிமுடி கவித்தினிதாண்டு வந்தது. ஆயின் காலப் போக்கில் சைவம் ஒருகால் மிகவும் நெருக்கடியான நிலையுற நேர்ந்தது. சைவத்தின் தலை நிலையமாயமைந்துள்ள தென்பாண்டி நாடு சமணர் கைப்பட்டுப் பெரிதும் உழன்றது. இக்காலத்திற்றான் தமிழிளங்களையாகிய சம்பந்தரும் பிறந்தருளினர். சிவஞானக்கன்றாகிய நம் குழந்தைப் பெருமான் பிறந்த சைவத் திறம் விளக்கிவருங்காலை பாண்டி நாட்டிற் சமண நெறியானது மிகவும் செழுமையுடன் வீறி விளங்கிற்று. பாண்டியனும் அமணர் நெறிச் சார்புதனை அறமென நினைந்து அதனைத் தழுவிக்கொண்டான். அரசன் வழி அவன் குடிகளும் சென்றன. திரு நீற்றொளி நாட்டிற் குன்றியது; திருக் கோயில்களெல்லாம் அமண் பள்ளிகளாய் மாறின; படிற்றொழுக்கம் பரந்தது; சுயமை கனன்றெழுந்தது; அருளொழுக்கம் தளர்ந்தது. பாண்டிப் பெரு நாட்டில் சைவத்திருவாளர் ஒருவரும் இல்லை யென்னும் நிலைவந்தெய்திற்று.

சைவத் திருவொளி வீசிய நாட்டிற் சமண இருள் செறிந்த பெருநிய காட்சி மிகவும் இரங்கத் தக்கதாய் இருந்தது. ஆயின் நீறு பூத்த தீப்போல், இரண்டு சைவச் சுடர்கள் மங்கையர்க் கரசியாகவும் அமைச்சர் குலச்சிறையாகவும் திகழ்ந்தன. பாண்டி நாட்டின் உய்வுக் கெனவே இவ்விரு மணிகளும் உருவெடுத்தன போலும்!

### தவமணி மங்கையர்க்கரசியார்

இவ்வாறு சைவத் திருநாடாகிய பாண்டி நாடு சைவ வளம் குன்றிக்கிடப்பதை நம் தவமணி மங்கையர்க் கரசியார் கண்டார்; துன்பக் கடலில் மூழ்கினர். அறிவாராய்ச்சியிற் சிறந்த தெள்ளியராதலால் தமது மனதைக் காழ்ப்புத்துறைகளில் இறங்க வண்ணம் காப்பாற்றிக் கொண்டார். சமணர்மீது பொறாமை கொண்டாரல்லர்; அவர்கள் மீது சொல்லம் பெய்து போர் தொடுத்தாருமல்லர். நிறைந்த உள்ளத்துடன் தம் அரிய நெறிக்கு உற்ற இடர் தீர்க்க முயன்றனர். ஆலவாய் அண்ணலை நோக்கி இரப்பதையே தம் முற்றுகடனுகக் கொண்டார். அவரது அருளின்றி எக்காரியமும் முடியா தென்னும் உறுதி அம்மையாருக்கு மிகவும் உண்டு. ஆகையால் ஆலவாய் அப்பன் திருவருளை வழுத்திக் கொண்டே தம் நெறிக்கு மீண்டும் தேசும் முயற்சிகளில் தலைப்பட்டார். மீண்டும் தமிழ்நாட்டில் சைவம் வளம் பெற்று - புத்துயிர் பெற்றுத் திகழல்வேண்டு மென்பதே அரசியாரின் தனிப்பேரவா. இந்த அவாவினால் அம்மையார் விழுங்கப் பெற்றார். சைவம் வளர்க்கும் சால்புடை எண்ணமானது கால அணுக்கள் தோறும் மங்கை மனதைப் பிடர்பிடித் தந்திக்கொண்டே யிருந்தது. அல்லும் பகலும் அம்மையார் சைவக் கனவே கண்டார். சைவத்திற்கே தம் வாழ்நாளை ஈந்தார்; தியாகஞ் செய்தார். சைவ ஆக்கத்தையே தமது ஆக்கமாகக் கொண்டார். சுருங்கச் சொல்லின் சைவத் தொண்டையே அரசியார் தமது தனித் தவமாய்க் கொண்டார் எனலாம். ஆயின் அவரது முயற்சிகட் கெல்லாம் மலையனைய வோர் மாப்பெருந் தடையாக அரசன் இருந்தான். அவன் அறியா வண்ணமே அம்மையார் தமது சைவ ஒழுக்கத்தையும், சைவத்தை உயிர்ப்பிக்கச் செய்யும் முயற்சிகளையும் மறைவாய் நிகழ்த்தவேண்டியவரா யிருந்தார்.

### அம்மையார்க்கு உறு துணை

ஆயின் அமைச்சர் குலச்சிறை, அம்மையார்க்கு உறுதுணையாய் அமைந்ததே அளவிறந்த நன்மையளித்தது. அமைச்சர் உதவியால் அரசியின் நோக்கங்களெல்லாம் முட்டின்றி நிறைவேறக்கூடியனவாய் இருந்தன. அரசன் அமண்நெறி புகுந்தமைபற்றி அரசிக்கு அளவிறந்த அன்பமெழுக்கம், அவன் பால் ஒரு சிறிதேனும் வெறுப்புத் தோன்றவில்லை. சைவத்தின் பால் உரை கடந்த பற்று முறுகி வளர்ந்தும், அப்பொருநெறிக்கு ஊறு நிகழ்த்தி வரும் பொய்ம்மையாளர்களை யெல்லாம் பரிந்தோம்பிப் பாராட்டிவரும் தமது கணவனர் மீது என்னவேனும் அன்பிற் குறைந்தாரில்லை! உள்ளத்தின் நிறைவு இருந்தவாறென்னே! இஃதே அகலறிவிற்கனிந்த நிறையுளப்பெற்றி! மங்கையர்க்கரசியின் விரிந்த - காழ்ப்பற்ற கவின் பெரு மனப்பான்மையை இக்கால மாதர்உலகு பற்றுக! சமயப்பற்றின் பேரெல்லையாகவும் இல்வாழ்க்கையின் ஒப்பற்ற இலக்கியமாகவும் இவ் வம்மையாரது வாழ்வு இலகுகிறது. பூசல்கடந்த புனிதவதியாய், பிணக்கொழித்த புண்ணிய மணியாய் நம் அரசியார் விளங்குகிறார். அன்று தம் கணவனேடு அவர் பிணங்கியிருப்பரேல் இன்று தென்தமிழ் நாட்டில் சைவ மணம் கமழுங்கொல்? இராமசாமி நாயக்கர் கூட்ட சுயமரியாதை இயக்கமெனும் நாஸ்திக இயக்கம் இக்கால் நம் நாட்டிற் காணவேண்டியதில்லையே! அன்றே நம் நாடு ஒளி வெறுத்த இருள் நாடாய்-கடவுள் மறுக்கும் கார் இருள் நாடாய் மாறியிருக்கும்! ஆயின் அரசியார் பொறுமையும் அமைதியும் நிறைந்த உள்ளத்தோடு தம் ஆருயிர்க் கணவனையும் தம் வழி ஈர்த்துச் செல்லவேண்டும் மென்னும் அகல் நோக்குடன் அடக்கமாய் உழைத்தார். ஆயின் இக்கால சீர்திருத்தக்காரர்களைப் போல் அம்மையார் மதவெறி கொண்டிருப்பரேல் அரசனது சீற்றத்திற்கு ஆளாய் அன்று அழிந்திருப்பார். அவரது மதிநுட்ப அமைதித் தொண்டே இன்றும் சைவத்தை நிலவச் செய்தது. வெறி கொண்ட சீர்திருத்தக்காரர் பெரும்பாலும் தாம் எடுத்த முயற்சிகளில் தோல்வி யடைவது வழக்கம். வெற்றி நல்கும் வீர அமைதித் தொண்டே தொண்டாகும். அஃதே அறவழியுமாகும். சமயத் தொண்டாற்றும் பொறுப்பேற்றுவோர்க்கெல்லாம் அரியதோர் முறையை அம்மையார் காட்டிப் போந்தார். குலச் சிறையின் சூழ்ச்சித் துணையால் திருஞான சம்பந்தப் பெருமானைப் பாண்டி நாட்டிற்கு அழைப்பித்துத் தம் நாயகனுக்கும் பிரக்கும் அருளொளி ஊட்டிச் சமணர்களை யெல்லாம் கல்வழிப் படுத்த வேண்டுமென்று அரசியார் நினைத்து,

### வாதம் நிகழ்த்தி வெற்றி பெறல்

அதற்கு வேண்டிய ஒழுக்குகளையும் விரைந்து செய்து முடித்தார். சமண முனிவர்களோடு வாதம் நிகழ்த்தச் சண்பையர்கோன் வந்திருக்கும் செய்தி அரசனுக்கு எட்டிற்று. சமண் நெறி யென்னகுமோவென அரசனும் அஞ்சிக் கலங்கிக் கிடந்தான். இவ்வேளையிற் றனும் அரசி தமது நோக்கங்களை அரசனுக்குத் தெரிவிக்கவில்லை. வாதம் நிகழ்த்தி வெற்றிபுறும் கட்சியைச் சேர்ந்து கொள்வதே தகுதியென அரசனைத் தேற்றி அவன் தனாங்கு நீக்கி அவனது உடன்பாட்டையும் அரசியார் பெற்றுக்கொண்டார். இங்கேதான் அம்மையாரது சூழ்ச்சித்திறன் மிகவும் எழுப்பமாக விளங்குகிறது. "ஆக்கக்கருதி முதலிழக்குஞ் செய்வினை யூக்கார் அறிவுடையார்" என்ற வள்ளுவர் திருவாக்கிற்கிணங்க மிகவும் செய்வினை யாராய்ச்சித் திறனுடனேயே அம்மையார் தமது எண்ணத்தை நிறைவேற்றினர். தமது சூழ்ச்சித் திறமையால் அரசன் உடன்பாட்டோடு இருகட்சியினரையும் வாதம் நிகழ்த்தும் வகையிற் பொருத்திக் கலகம் முதலிய வீண் வெறிச் செயல்கள் நிகழாவண்ணம் காப்பாற்றி வெற்றிபெற்ற அம்மையாரது கூர்த்த மதி மிகவும் வியக்கற்பாலது. இக்காலச் சீர்திருத்தக்காரர்களும், சமயத் தொண்டர்களும் வெறிகொண் டுழலாது அம்மையாரின் அமைதி நெறியைப் பின்பற்றுவார்களேற் பெரும் பயனெய்துவார்கள். இவ்வாறு அரசன் முதல் குடிகளீறுக - நாடு முழுமையும் - தனக்குத் தடையாக இருந்தும் அவற்றையெல்லாம் பொருட்படுத்தாது, வீரநெஞ்சுடன் மதிசால் அமைதி வழிநின்று மீண்டும் பாண்டி நாட்டில் நம்மரசி சைவத்தை நிலை நாட்டினர். இவ்வொரு பெண் செய்த தவத்தின்பயனுல்-தொண்டின் வீறுவாய் மீண்டும் பாண்டிநாடு சைவ ஒளிபெற்றுச் சிறந்தது. இறந்துபட்ட சைவ நெறிக்குப் புத்துயிர் அளித்த பெருந்தொண்டையே நம் அரசியார் ஆற்றி உய்ந்தாரென்க.

### தமிழ்த் தாய்மார்களின் கடமை

தமிழ்த் தாய் மார்களே! சைவ மணிகளே உங்கள் அன்னை மங்கையர்க் கரசியால் வளர்க்கப்பெற்ற - புத்துயிர் அளிக்கப்பெற்ற செம்பவள வள்ளிக் கொடியாம் சைவம் இன்று எங்ஙனே புற்றிருக்கிறது? நீரின்றி ஒளியின்றி - பெரிதும் செழுமை கெட்டு வாடிக் கிடக்கின்றதே! இவ்வழிய கொடியை வளர்க்க வேண்டியது நுங்கள்கடனே; நுங்கள் கடனே! நீர்பெய்து ஒளிவளம் பெருக்கி இம்மலர்க்கொடியை மீண்டும் தமிழ் நாட்டில் மணம் பரப்பி மலரச்செய்யவேண்டியது நுங்கள் முதற்பெருங் கடனென்பதை உடனே உணர்ந்து பணியாற்ற விரைந்து எழுங்கள்; எழுங்கள். சைவச் செழுமலர்க் கொடியை அழிப்பதற்கு முனைந்து நிற்கும் அரக்கர் குழாங்களை யெல்லாம் வீரமாய் எதிர்த்து வெற்றி பெற வீரத் தமிழ் முனிவர் மறைமலை யடிகளும், தமிழகத் தலைவர் கலியாணசுந்தர முதலியார் அவர்களும் வீரர் பிறரும் முன்னணியில் நிற்கிறார்கள். ஆகையால் யாம் எதற்கும் அஞ்சவேண்டியதில்லை. வேண்டியது மங்கையர் தவம்; மங்கையர் தவம். சைவம் மீண்டும் வளம்பெற்றோளிரும்; ஐயம் ஒரு சிறிதும் இல்லை. சைவம் வளர்க்க நற்றவ மங்கையர் முனைந்தெழுவார்களாக. உண்மை, வீரம், அறிவு முதலிய நல்லியல்புக ளெல்லாம் வாய்க்கப்பெற்ற, உயர்வுள்ளும் நெஞ்சத்தினராய் ஒப்பற்ற பெருந்தொண்டாற்றி உயர்ந்த நம் தவக்கொழுந்தை- செந்தமிழ்ச் செல்வத்தைத் தமிழ் மாதரெல்லாரும் தம் வழி படு வீரத் தெய்வமாகக் கொள்ளல் சாலவும் சிறப்புடைத்தென்க.

### போலீஸாரின் தொந்தரவு

#### ஒரு பெண்மணியின் அநுபவம்

லாகூரைச் சேர்ந்த ஸ்ரீமதி பார்வதி தேவி பத்திரிகைகளுக்குப் பின் வருமாறு எழுதுகிறார்:—

நான் என் தாய் நாட்டிற்காகச் சென்ற எட்டு வருஷகாலமாக என்னுலியன்ற தொண்டுசெய்து கொண்டு வருகிறேன். அதுமுதல் போலீஸாரும் ஸி. ஐ. டியாரும் என்னைக் கவனித்த வண்ணமா யிருக்கிறார்கள். ஆனல் சென்ற வாரம் முதல் அவர்கள் என் தமையனுருக்கும் என் குடும்பத்தாருக்கும் செய்துவரும் தொந்தரவுகள் மிக்க கஷ்டம் முன்னவைகளா யிருக்கின்றன. என்னுடைய சகோதரர் ஆசிரியர் ஜயசந்திர வித்தியாலங்காருக்கும், டோரா இஸ்மேல் கானைச் சேர்ந்த ஸ்ரீமதி சுமித்ராதேவிக்கும் விவாக நிச்சயம் ஏற்பாடாகி யிருக்கிறது. ஸ்ரீமதி சுமித்ராதேவி, 19-4-29ல் லாகூருக்கு வந்து என் குடும்பத்தாருடன் தங்கி யிருக்கின்றனர். 22-4-29 முதல் எங்கள் வீட்டுக்கு எதிரில் போலீஸ் காவல்கள் போடப்பட்டிருக்கின்றன. எங்கள் வீட்டுக்கெதிரே அவர்கள் கார்க்கட்டில்களைப் போட்டுக்கொண்டு சீட்டு விளையாடுவதும் ஹுக்கா பிடிப்பதுமாயிருக்கின்றனர். எங்கள் வீட்டுக்கு வருவோர் போவோரை யெல்லாம் குறுக்கு விசாரணை செய்வதும், பயப்படுத்துவதுமாயிருக்கின்றனர். அவர்களுடன் சைனிகர்கள் எப்பொழுதும் ஆஜரிருக்கின்றனர். என்னுடைய தாயாரையும் அவர்கள் விடுவதில்லை. என்னுடைய மகன், மருமகன், மருமகள் முதலிய சிறிய குழந்தைகளையும் அவர்கள் பலவிதமான கேள்விகள் கேட்டு, எங்குடும்பத்தினரைப்பற்றிய வரலாறுகளைப்பற்றி அறிந்துகொள்ள முயற்சி செய்கிறார்கள். என் சகோதரருடைய புஸ்தகக் கடையில் புஸ்தகம் வாங்க வருவோரும் கூட பலவிதமான கேள்விகள் கேட்கப்படுகிறார்கள். (ஸண்டே டைம்ஸ்)

### கூட்டுறவு முறையினலுண்டாகும் நன்மை

சென்னையிலுள்ள அக்கவுண்டண்ட்ஜெனரல் ஆபீசில் உள்ள உத்தியோகஸ்தர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து ஐக்கிய நாணய முறையில் ஒரு ஹோட்டலை ஸ்தாபித்து சென்ற மூன்று வருஷங்களாக வேலை செய்து வருகின்றனர். ஆரம்பத்தில் இரண்டு ரூபாய் வீதம் பங்கு பிரித்துக்கொடுத்த 432 ரூபாய் மூலதனத்தை முதலாகக்கொண்டு மேற்படி ஸ்தாபனத்தைத் தொடங்கினர். 1928- 29ம் வருஷத்தில் 17111-3-0 வரவும் 16829-0-9 செலவும் நேரிட்டது. நிகரலாபம் 752-4-3 கிடைத்தது. இந்த வருஷத்தில் ஐந்நூறு ரூபாய் டிவிடெண்ட் டாகக் கொடுக்க உத்தேசித்திருக்கின்றனர்.

## பாழ் வெளியும், பா மண்டலங்களும்

அடையாறு திருவாளர் தி. மு. மாணிக்கம் பிள்ளை அவர்கள் பின் வருமாறு எழுதுகிறார்கள்:—

நிலவில்லா நாளில், மாசுமறுவில்லா நன்னிரவில் வானத்தை அண்ணாந்து பார்ப்போமானால் இருளடைந்த ஆகாயத்தில் நட்சத்திரங்கள், மினு மினுக்கென்றும், சில ஒரே விதமாயும், உற்றுப்பார்த்தால் சிலவர்ணங்களுடனும் பெரிதும் சிறியதுமாய் எங்கெங்கும் கண்ணுக்கு எட்டினதூரம் வரையில் பிரகாசித்துக்கொண்டிருப்பதைக் காணலாம். இந்நட்சத்திரங்கள் நெருங்கி இருப்பதாகக் காணப்படினும் ஒன்றுக்கொன்று வெகு தூரத்திலிருக்கின்றன. நட்சத்திரத்திற்கும் நமது பூமிக்கும் இருக்கும் தூரம் இவ்வளவென்று வான சாஸ்திரிகள் கணித்துவைத்திருக்கின்றனர். இத்தொகையை மைல் கணக்கில் காட்டினால் சாதாரணத்தில் படிக்க முடியாத எண்களாக விருக்கிறபடியால், அந்த நட்சத்திரத்திலிருந்து வரும் வெளிச்சம் பூமிக்கு வந்து சேரும் [அதாவது வெளிச்சத்தின் வேகத்தின்] கால அளவைக்கொண்டு இத்தனை நாள், மாதம், வருஷம் செல்லும் தூரம் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். வெளிச்சம் ஒரு விநாடிக்கு 196000 மைல் போகின்றது; சூரிய வெளிச்சம் பூமிக்குவர எட்டு நிமிஷம் அதாவது 480 விநாடிகள் செல்கின்றன. இது எவ்வளவு தூரமென்பதைக்கவனிக்க வேண்டியிருக்கிறது. இதைவிட தூரமாயுள்ள நட்சத்திரங்கள் இருக்கின்றன. இவைகளிடமிருந்து வெளிச்சம் நமக்குவர நிமிஷங்களல்ல; வருஷங்கள் செல்லும். "ஓரியன்" எனும் நட்சத்திரத்தினின்று வர அறுநூறு வருஷங்கள் செல்லுகின்றன. இப்படியே இலட்ச வருஷங்கள் செல்லும் தூரத்தில் நட்சத்திரங்க ளிருக்கின்றன. நாம் இப்போது அந்த நட்சத்திரத்தைத் தூர திருஷ்டிக்கண்ணாடியில் பார்ப்போமானால் அதில் பார்க்கும் விஷயம் நடந்து இலட்ச வருஷங்களாய் விட்டது. இப்போது அங்கு நடக்கும் விஷயம் இனி இலட்ச வருஷங்களுக்குப் பிறகு தான் பார்க்க முடியும். இந்த நட்சத்திரம் எவ்வளவு தூரம் என்பதை மைல் கணக்கில் எழுதினால் வாசிக்கமுடியாது.

### மண்டலங்களும் மகா மண்டலங்களும்

இந்த நட்சத்திரத்திற்குப்போகும் படியான வல்லமை நமக்கிருந்து நாம் அங்கே போய் பார்ப்போமானால் அங்கிருந்து அதற்கு அப்பாலும் முன்னும் பின்னும் கீழும் மேலும் இன்னும் எல்லாப்பக்கங்களிலும் இவ்விதமே நட்சத்திரங்கள் இருப்பதைக் காணலாம். மற்றும் ஒரு கோடியிலிருக்கும் நட்சத்திரத்திற்குப் போய் அங்குப்பார்க்கும் பட்சத்தில் இந்தப் படிக்கே அடி நடு முடிவிலாத அகண்டா காரமாய் எல்லையில்லா வெளியாயிருக்கும் தோற்றமாகிய இருளில் கணக்கில்லா நட்சத்திரங்கள் அந்தரமாய் நின்று நிறைந்திருக்கின்றதைக் காண்போம். இந்தப்படி இருக்கும் நட்சத்திரங்களில் ஒவ்வொன்றும் ஒரு சூரியனாகவும் இவ்வொவ்வொன்றும் பல கிரகங்களால் சூழப்பட்ட மண்டலமாகவும் இருப்பதாகப் பெரியோர் கண்டிருக்கின்றனர். சூரியனை மற்றொரு மண்டலத்திலிருந்து பார்த்தால் நட்சத்திரமாகவே தோன்றும். இது தூரத்தைப் பற்றியது. இவ்விதமாயிருக்கும் மண்டலங்கள் அநேகம் கூடிய ஒரு மஹா மண்டலம் இருப்பதாகவும், நமது மண்டல சூரியனை கிரகங்கள் சுற்றி வருவதுபோல் இம்மண்டலங்களெல்லாம் ஒரு மத்திய சூரியனைச்சுற்றி வருவதாகவும் அறிஞர் கண்டு பிடித்திருக்கின்றனர். "ஹெரிகுலிஸ்" என்ற நட்சத்திரத்தை 35000 மண்டலங்கள் சுற்றி வருகின்றனவாம். இதை யொரு மஹா மண்டலமென்று சொல்லலாம். இதைப் போலுள்ள மஹா மண்டலங்களுக்குக் கணக்கில்லையாம். ஒரு கால் இவைகளுக்கெல்லாம் ஒரு மத்திய சூரியனிருக்கலாம். அதை இவைகள் சுற்றிக்கொண்டிருக்கலாம் என்கிற நியாயம் ஏற்படுகின்றது. இவ்வகண்ட வெளியில் மேலும் கீழும் எல்லாப் பக்கங்களிலும் சிலந்திப் பூச்சி வலை கட்டி அந்தரமாய் எங்கெங்கும் மிதந்து இருப்பதுபோல மண்டலங்கள் நிறைந்திருப்பதைக் காணலாம். மேலும் அண்டங்களெல்லாம் மண்டலத்தில் அடங்குகின்றன; மண்டலங்களெல்லாம் மஹா மண்டலத்தில் ஒடுங்குகின்றன; மஹா மண்டலங்களும் இதற்கு மேலுள்ள ஒரு பிரமாண்டத்தில் நிற்கின்றன. இந்தப்படி ஒன்றுக்கொன்று உள்ளடங்கி கண்ணிற்கு எட்டாத நாமரூபங்கள் இரண்டுமின்றி-யொப்பமாய் இரண்டற்றொன்றாய் நிற்கும் ஏதோ ஒன்றில் அடங்குகின்றன.

### பிறப்பும் இறப்பும்

இன்னும் மண்டல மொன்றைத் தனியாக எடுத்துக் கவனித்துப் பார்த்தால் இது இவ்வெளியினிடையே பிறப்பதும் செயல்கொண்டிருப்பதும் பிறகு மாள்வதுமாயிருக்கின்றது. அதாவது அவ்யக்தமாகிய இவ்விருள் வெளியில் தோன்றி கற்பகாலமிருந்து பிரளயமாகி மறுபடியும் இவ்வெளியிலே ஒடுங்குகின்றது. மானிடர்க்கு எப்படி பிறப்பு இறப்பு இருக்கின்றதோ அப்படியே இதற்கும் பிறப்பு இறப்பு இருப்பதும் தவிர ஒவ்வொருகற்பகாலத்திலும்முன்னேற்றமும் உண்டு. இவ்விதமே மஹாமண்டலத்திற்கும் தோன்றல், திரிதல், கெடுதல் எனும் விகாரங்களுடன் விரிதலு முண்டு. ஆகையால் மஹாமண்டலம் ஒன்று பிரளயத்திலிருக்கும் போது அதிலுள்ள எல்லா மண்டலங்களிலும் மறைந்து போகும் என்றாலும் இதிலுள்ள மண்டலங்கள் ஒவ்வொன்றிற்கும் தனித் தனி பிரளயமும் தோற்றமும் உண்டு. ஆதலால் இவ்வெளியில் எப்போதும் மண்டலங்களும் மஹா மண்டலங்களும் இன்றும் இனதவிடபிரமாண்டங்களும்பிறந்துவளர்ந்து மாண்டு கொண்டே இருக்கின்றன. இவைகளை யெல்லாம் விழுங்கும் ஒன்றில் அடங்கும் போது "பொதுவான சுழுத்திபோல பொருந்தும் அவ்யத்தம்" என்கிற மகாபிரளயமாயிருக்கலாம். அப்போது எல்லா மண்டலங்களும் மறைந்து போகலாம். என்றாலும் இவ்வெளி வெறும் வெளியாயில்லாமல் எப்போதும் மண்டலங்களும், மகா மண்டலங்களும் தோன்ற வதும் மறைவதுமாயிருக்கின்றன.

மேலும் ஒவ்வொரு மண்டலத்திலும் அந்தந்த உலகத்திலிருக்கும் சௌகரியத்திற்குத் தக்கபடி, புல்லாய் பூண்டாய் விலங்காய் மானிடனாய், தேவர்களாய் இன்னும் இதரவர்க்கங்களாய், ஜீவசஞ்சாரமுறைப்படிவேன்கன்படிப்படியாய் மேற்கொண்டே செல்கின்றன. இவை எல்லாம் வான சாஸ்திரிகளுக்கு தெரிந்த விஷயமே.

### விராட் புருடன்

இதையே தேவபார்வையில் பார்ப்பவர்களுக்கு இம்மண்டலம் ஒவ்வொன்றிற்கும் ஓர் ஈசுவரன் அதிபதியாய் வீற்றிருப்பதாயும் இம்மண்டலமும் அதிலுள்ளவைகளும் அவருடைய சிருஷ்டியாகவும் "இன்பப்புணரிஆதவனாகத் தோன்றும்" சூரியன் அவருடைய தூல தேகமாகவும், கிரகங்களெல்லாம் அவருடைய அவயவங்களாகவும் காணப்படுகின்றன. சூக்குமத்தில் தேஜஸ் வடிவாய் முட்டைகளைப் போலுள்ள ஜீவராசிகள்-பசுக்கள் எல்லாவற்றையும் சேர்த்து ஒரு பெரிய கருப்பையில் வைத்திருப்பதாயும் (இரணிய கருப்பன்-பொன் வடிவம் போன்ற கருப்பப்பையை உடையோன்.) இன்னும் கற்பகால முடிவில் ஜீவர்கள் எல்லாம் ஒழுங்காய்த் தேடி வருதலை ஒரு பினாகைக் காட்டும் விமலபோத சொரூபமாகவும் ஞானமார்க்கத்தில் வருபவர்களை இவர் தலையாகவும், பக்தி மார்க்கத்தில் வருபவர்களை இதயமாகவும், கர்மமார்க்கத்தில் தேடி வருபவர்களை கை, கால், புஜங்களாகவும் நாட்டி அதை பிரம்மாண்ட விராட் புருடனாகவும் காணப்படுகிறார் என்றும், இதற்கு மேலும் இவைகளுக்கெல்லாம் பட்டும் படாததுபோல் பற்றில்லாது தாமரை இலை நீர்போலவும் புராணத்தில் சொல்லும் சேஷசயனம் போலும் மாயையில் பற்றாது தனியே அந்தர் யாமியாயிருக்கின்றார் என்றும் அறிஞர்கள் கண்டிருக்கின்றார்கள்.

### பிரபஞ்ச உற்பத்தி

"அகண்டாகாரமாயும் ஆர்க்கும் காணவும் அறியவும் படாதென்றும் வாச்சியவடிவென்றும் சேர்க்கும் நாமரூபப் பயிர் வித்தென்றும்" சொல்லும் வெளியில் முன் விவரித்த சூரிய மண்டலம் ஒவ்வொன்றும் ஒரு பெரிய நீர்க்குமிழ் போல் இருக்கின்றது. இந்தக் குமிழியிலிருந்து பிரபஞ்சமாய் வரும் அண்டபிண்ட சராசரங்களெல்லாம் விதையில் அடங்கிய மரம்போல் மறைவாய் இதில் அடங்கி யிருக்கின்றன. பிரளயத்திலிருக்கின்றன. இதற்கு முன் சென்ற கற்பத்தில் நடந்த விவரம் அவ்வளவும் தேறிவந்த ஜீவர்களனைவரும் அறைகுறையாய்த் தேர்ச்சி பெற்றவரும், பெறுதவரும் எல்லா ஒரு சேஷமாகத் திரண்டு ஈசுவரனிடத்தில் அவ்யத்தத்தில் ஆனந்த தூக்கத்தி லிருக்கின்றன.

மனுடன் மனுடக் தருவன் றேவக்
  தருவன் பிதிர்பிறவித் தேவன்
றனுடன் கருமசுரன் சுானிக் திரனுசான்
  பிரசா பதியா னேன்
கனவிராடனி ரணிய கருப்பன் கருது
  மிப்பதி னெரு பேரின்
பினவானக் தங்க ளுவரயாம் பிரளய
  வெள்ளக் கடல் பிரமானந்தம்.

இவருடைய அருட்பார்வை பட்டவுடனே ஒன்று மில்லாத இவ்வெளியில், நீரில் நுரை

னெம்பி வருவது போல் இவை உண்டாகித் திரண்டு விரிந்து கால நியமத்தில் பிரபஞ்சமாகி வருகின்றன. இந்தப்படி வருவதையும் ஈசுவரனுடைய சுவாசத்திற்கு ஒப்பிட்டு சொல்லுவதுண்டு. உள் சுவாசத்தைத் பிரளய மென்றும், வெளி சுவாசத்தை தோற்றம் என்றும், பிரம்மாவின் இரவென்றும் பக[illegible]ம் கூறுவதுண்டு.

## "கோயிலோன்"

இவ்வெளியில், ஒரு மண்டபத்திற்கும் மற்றொன்றிற்கும் இடையில் வெளிபோல் தோன்றும் இருளில் என்ன வஸ்து இருக்கின்றதென்று, இரசாயன சாஸ்திரிகளும் வானசாஸ்திரிகளும் நமது தலைவர் டாக்டர் பெஸண்ட் அம்மையாரையும், பிஷப் லெட்பீடர் அவர்களையும் தேவ பார்வையைக் கொண்டு சோதிக்கக் கேட்டுக் கொண்டதின் பேரில் சோதிக்க அந்தவெளியில் ஓர் அற்புதவஸ்து நிறைந்திருப்பதாயும் இது பூலோகத்தில் உள்ள எல்லா உலோகங்கள், தங்கம், பிளாடினம் இவைகளை விட எவ்வளவோ கனமாயிருப்பதாயும், நாம் காணும் வஸ்துக்களெல்லாம் அதனுடைய நுரையாகவும் கண்டு அதற்குக் "கொயிலோன்" எனப் பெயரிட்டிருக்கிறார்கள். இந்நுரைக்குமிழி ஒன்றைச் சோதிக்குமிடத்துக் கொயிலோன் என்பது ஓடாகவும் ஈசுவரனுடைய சக்தி அதில் நிறைந்த பூரணமாகவும் இருப்பதைச் சோதித்து நிச்சயித்திருக்கின்றது. ஆகையால் இவ்வெளியில் சத்தென்று சொல்லுபவைகளும், ஜடமென்று சொல்லும் பொருள்களும்-நாம ரூபப் பொருள்களெல்லாம்- நொய்ய பூதங்கள் தொடங்கி ஈசுவரன் வரையிலிருக்கும் எல்லோரும் இதிலடக்கம். இதை மாயை என்றும் சொல்லலாம். இந்த மாயை யின்னதென்றுரைத்திடப்படாமையால் அவாச்சிய வடிவாகும் சொரூபமில்லாமை என்றும்- "பரவு பூதங்கள் கண்டனுமானத்தால் பலருக்கும் வெளியாகும்." மாயையில்லாமல் ஈசுவரன் வரமுடியாது. இவ்விரண்டும் அந்தமுதலுமின்றி ஆதியுமின்றி வான் போலிருக்கும் வெளியிலிருக்கின்றன. இதில் நிர்க்குணமாயிருந்தவர் மாயையை ஒரு விண்போல போர்வையாகப் போட்டபிறகு தான் சகுணமாகக்காட்டுகின்றார். இவர் சாத்வீக குணத்தை பிரித்துப் பிறகுதான் மாயை வெளியாகிறது. ஆகையால் இவ்விரண்டும் ஒன்றே; இரண்டல்ல. இதே மூலப்பிரகிருதி என்று சொல்லலாம். கடபடாதி வஸ்துக்களாயும் இன்னும் அண்டபிண்ட சராசரங்களாக வரப்பட்டவைகளுக்குப் பல உருவங் கொடுக்கும் மண்ணாகவுமிருக்கிறது. இதை "கொயிலோன்" என்று சொன்னது நியாயமே.

## பர பிரம்மம்

மஹாமண்டல ஈசுவரர் முந்தியே மாயை எடுத்து பிசைந்து திரட்டிய மாவைப் போல மூலப்பிர கிருதியாக்கி இச் சிற்றீசுவரர்களுக்கு உதவும்படி கொயிலோனாக வைத்திருக்கிறார்போலும்! இவருக்கு மாயையாக அமைந்தது இதிலும் அரூபப்பொருளாய்உள்ளதிலிருந்து எடுத்திருக்கலாம். இத்தப்படி இதற்கு மேலும் யோசிப்போமானால் வெளிக்குள் வெளியாய் முடிவினில் எல்லாவற்றையும் விழுங்கும் பரப்பிரஹ்மம் என்று சொல்லும் ஏகபொருளில் அடங்கும்.

பரபிரம்மனுக்கும் ஈசுவரர்களுக்கு முள்ள தூரத்தை இதனின்றும் தெரிந்து கொள்ளலாம். நமக்கும் ஈசுவரனுக்குமுள்ள படிகளை அண்ணாந்து பார்க்க முடியவில்லை. அப்படியே நமக்கும் நமக்குக் கீழுள்ள அணுபோலிருக்கும் கிருமிவரையிலும் உள்ள படிகளையும் நோக்க முடியவில்லை. இன்னும் இதற்குக் கீழும் அரூபமாய் மாயை வரையிலிருக்கும் படிகளையும் பார்க்க முடியவில்லை. மாயையாகி பரப்பிரம்மத்திலிருந்து புறப்பட்டு பின்னுக்குப் பஞ்சபூதங்களாகி, அணுக்களாகி மண்பொன் முதலிய உலோகமாகிப்பின்னும் புல், பூண்டு, விலங்கு நரர் சுரராகி இன்னும் அடைவினில் அதே பரப்பிரஹ்மத்தில் சூனியத்தில் கலக்கின்றன. சூனியத்தில் பிறந்து நடந்து பிறகு சூனியத்திலேயே சேருகிறோம். சூனியம் இன்னதென்று கண்டு பிடிப்பதுதான் எல்லோருக்குமிருக்கும் பசி தாகம். இஃது எப்போது தீரும் என்[illegible] ஈசுவரர்களுக்கும் தெரியுமோ தெ[illegible]தா தெரியாது. தெரிந்தவர் அதில் ஐக்கி[illegible]யிருப்பார்; அஃது ஆடுவது போல் ஒன்றாய் பலவாய் உயிர்க்குயிராய் ஆடுவார்.

---

அருப்புக்கோட்டை சாலியர் மஹா ஜன தருமபாடசாலையை 4-7-28ல் சென்னை அரசாங்கத்து முதல் மந்திரி ஸ்ரீமான் டாக்டர் B. சுப்பராயன் அவர்கள் திறந்து வைத்தார்கள். அன்று முதல் இன்று வரை பாடசாலையில் 150 மாணவர்கள் படித்து வருகிறார்கள். மேற்படி பாடசாலையில் வருஷாந்தர வகுப்பு மாற்றுகிற பரீட்சை 1-5-29 முதல் 4-5-29 வரை நடை பெற்றது. ஒரு மாத காலம் கோடைகால விடுமுறைவிடப்பட்டது என்று ஒருநிருபர் எழுதுகிறார்.

## கடவுள் காட்சியும் தாயுமானாரும்

திரு. வி. கலியாணசுந்தர முதலியார் இயற்றியது

மன மாசுகளை நல்லறிவால் கழுவி உண்மையில் மூழ்கி நின்ற அநுபூதிமான்களில் ஒருவராகிய தாயுமானார் அருளிச்செய்த "ஐவகை எனும் பூதம்" என்னும் திருப்பாட்டைப் பீடிகையாக்கொண்டு இந்நூல் எழுதப்பட்டுளது. நூலின் திரண்ட கருத்து மெய்ம்மையில் கடவுள் காட்சி பெறலாமென்பது. விலை அணா 4. வேண்டுவோர் ஐந்து அணா ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். ஏக காலத்தில் 12-புத்தகங்கள் வாங்குவோருக்குத் தபால் செலவு இனம்.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.



## வியாசங்கள்!

வியாசங்கள் !! வியாசங்கள் !!!

வியாசங்களை மிக எளிதில் அறிந்து அதன்படி நடந்து நன்மை யடையக் கூடிய விதமாக எழுதப்பட்டுள்ளன.

கீழ்க்கண்ட வியாசங்கள் ஒவ்வொரு தமிழரும் வாங்கி வாசித்துப் பயனடையக் கூடியனவாகும்.

நமது முன்னோர்களுடைய உபதேசங்கள் பலவற்றை நம்மில் பலர் அறியாமலிருக்கிறார்கள். காரணம், அவை யாவும் செய்யுளாக இருப்பதினால். இந்த வியாசங்கள் அச்செய்யுட்களையே பெரும்பாலும் தழுவி வசனமாக எழுதப்பட்டிருக்கின்றன.

| | ரூ. | அ. | | ரூ. | அ. |
|---|---|---|---|---|---|
| அன்பு | 0 | 1 | பொது மதம் | 0 | 2 |
| பலவகை மனிதர் | 0 | 1 | ஆரு தாரம் | 0 | 2 |
| தவம் | 0 | 1 | சந்தேகம் | 0 | 2 |
| பொறுமை | 0 | 1 | கற்பு | 0 | 3 |
| இருவினை | 0 | 2 | அஸ்தபூஷணம் | 0 | 4 |
| இல்லறம் | 0 | 2 | பதினாறுபேறு | 0 | 4 |
| ஆலயவழிபாடு | 0 | 2 | என் தந்தையார் | 0 | 6 |

மேல்கண்ட பதினான்கு புத்தகங்களும் ஒரே தடவையில் வாங்குபவர்களுக்கு ரூபாய் இரண்டுக்குக் கொடுக்கப்படும்.

தபால் சார்ஜ இனம்! இன்றே எழுதுங்கள்.

நவீனகதா புத்தகசாலை,
122, மங்கமாரி வீதி, இரங்கூன்.



Printed and Published by T. V. Kalyanasundaran (Editor) at the Sadhu Press, 12-Ganapathi Mudaly St., Royapettah, Madras.

